# ஸ்ரீ குரு கீதை

(SRI GURU GITA)

மொழி பெயர்ப்பு

ஸ்ரீ சுவாமி நாராயணானந்தா



தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

# ஸ்ரீ குரு கீதை

மொழி பெயர்ப்பு:
ஸ்ரீ சுவாமி நாராயணானந்தா

தமிழாக்கம்
பேராசிரியர் : திரு. T.K. நாராயணன் M.Sc., M.Phil.,

வெளியிடுவோர்:
**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**
சிவானந்தா ஆஸ்ரமம்
சுவாமி சிவானந்தா சாலை
இராசிபுரம் : : சேலம் மாவட்டம்

விலை] 1993 [ரூ. 10.00

First Edition : 1993 - 1000 Copies

Translation from
**"GURU GITA"**
in Tamil

Printed out of the magnanimous donation of:
A humble devotee of
GURUDEV SWAMI SIVANANDA

Typeset by : Print Shop, Madurai -1
Printed At : Vivekananda Offset Press
Madurai.

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும், வழிகாட்டியாகவும் விளங்கும் சற்குரு ஸ்ரீ சுவாமி சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமஹராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப் பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ்நாட்டிலும் வெளி நாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழி பெயர்ப்புகள் இன்று இருக்கின்றன.

ஸ்ரீ சுவாமி நாராயணானந்தா அவர்கள் எழுதிய "ஸ்ரீ குரு கீதை" என்ற ஆங்கில நூலை பேராசிரியர் திரு. T.K.நாராயணன் M.Sc., M.Phil. அவர்கள் மிக மிக அற்புதமாக தூய எளிய தமிழில் அழகிய முறையில் மொழி பெயர்த்துள்ளார்கள்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் மதுரை 'பிரிண்ட்ஷாப்' டைப் செட் செய்து கொடுத்துள்ளனர். மதுரை விவேகானந்தா ஆப்செட் பிரஸ்ஸார் சிறந்த முறையில் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கிய அன்பர், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீகப் போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

-சுவாமி சிதானந்தா

ஓம்

# பொருளடக்கம்

# முன்னுரை

எல்லாம்வல்ல இறைவனுக்கு நமஸ்காரம். எல்லா பிரம்ம வித்யா குருமார்கள் மற்றும் அன்பிற்கும் வணக்கத் திற்குமுரிய குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்த மஹாராஜ் அவர்களது புனிதமான தாமரைப் பாதங்களுக்கு நமஸ்காரம். குருவுக்கு குருவாக ஜகத் குருவாக விளங்கும் இறைவனின் அருளும், எல்லா பிரம்ம வித்யா குருமார் மற்றும் வணக்கத்திற்குரிய குருமஹாராஜ் அவர்களுடைய ஆசிகள், 1972ம் ஆண்டில் வெளிவந்த முதற் பதிப்புக்குப் பிறகு 'குரு கீதை' என்ற இந்த மிகவும் அரிய உணர்ச்சி ஊட்டும் நூலின் இப்பொழுதைய பதிப்பிற்குக் காரணமாயுள்ள அத்தனை பக்தர்கள் மீதும் மலர்வதாகுக.

ஆன்மீக குருவைப் பற்றி எவ்வளவோ சொல்லியும் எழுதியும் ஆன பிறகும் கூட, பல சாதகர்களின் மனதில் பெருத்த குழப்பமும் சந்தேகமும் இன்னும் நிலவுகின்றன.

மூல சுலோகங்கள் மற்றும் அவற்றிற்கான எளிமையான ஆங்கில விளக்கத்துடன் கூடிய இந்த 'குரு கீதை' என்ற நூல் இத்தகைய சாதகர்களின் ஐயங்களைப் போக்குவது மட்டுமல்லாது, பரம ஆனந்தத்தை அடைவதற்கு மிகவும் அடிப்படைத் தேவையான குருபக்தியையும் அவர்களிடம் தூண்டுகிறது. அனைத்திலும் மேலாக, பரம்பொருளுக்கு இணையான ஸத்குருவின் உண்மை சொரூபத்தை இந்த 'குருகீதை' மிக அழகாக விளக்குகிறது. ஆன்மீகப் பாதையில் ஏற்கனவே முன்னேறிக் கொண்டிருக்கும் உண்மைச் சாதகர்களுக்கு இது ஒரு கலங்கரை விளக்கமாகத் திகழ்கிறது.

இந்த ஞானயக்ஞப் பிரஸாதம் வெளிவர உறு துணையாயிருந்த அத்தனை பக்தர்களையும் நான் மீண்டும் வாழ்த்துகிறேன். 1991ம் வருடம் செப்டம்பரில் சிவானந்த

ஆசிரமத் தலைமை ஸ்தாபனத்தில் நிகழ்ந்த 'தெய்வீகப் பத்தாண்டு' தொடர்பான ஆன்மீக, பண்பாட்டு விழாவின்போது இதை வெளியிட முடிவு செய்திருப்பது மிகவும் பாராட்டுதற்குரியதாகும்.

இந்த அரிய நூல் மிகப் பரந்த அளவில் பிரபலமாகி, எல்லா ஆன்மீக சாதகர்களுக்கும் பக்தர்களுக்கும் பயன்படுமாக !

அன்பிற்குரிய சாதககனே! உனது ஆன்மீக சாதனையிலும் தினசரி அனுஷ்டானத்திலும் இந்தக் 'குருகீதை'யின் ஒரு சிறு பகுதியைப் படிப்பதைக் கட்டாயப்படுத்திக் கொள்ள வேண்டும். தவிர ஒவ்வொரு வியாழக்கிழமையும் வாரமொருமுறை உங்கள் குருவிற்கு நீங்கள் செய்யும் விசேஷ சாதனையாக 'குருகீதை' முழுவதையும் படியுங்கள். ஆழ்ந்து சிந்திக்கவும், சிரத்தையுடன் ஒருமனதுடன் தியானம் செய்யுங்கள். உங்களது இதயத்தினுள் பரமகுரு யாண்டும் ஒளிர்ந்து கொண்டிருக்கிறார் என்பதை உணருங்கள்.

பக்தியுடன் தினமும் இந்தப் புனித நூலின் ஒரு பகுதியைப் படிப்பதானது உங்களது இதயத்தைத் தூய்மைப்படுத்தி உங்கள் வாழ்க்கையை ஒளிமயமாக்கி, ஆன்மீக ஒளியால் உங்களை பிரகாசிக்கச் செய்யுமாக.

இந்த நூலுடன் குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் ஆசிகளும் வருகின்றன.

ஜய் ஸ்ரீ ஸத் குருதேவ்!
ஓம் நமோ பகவதே சிவானந்தாய

- சுவாமி சிதானந்தா

# மேலான இலட்சியம்

(பிரம்மநிஷ்ட ஸ்ரீ குரு ஸ்வாமிகளின் உணர்ச்சிமிக்க சொற்பொழிவு ஒன்றிலிருந்து)

உலகமும் உலக வாழ்க்கையும் ஒருவனுக்குத் திருப்தியை அளிக்க முடியாத சமயத்தில், ஒருவன் தன் வாழ்க்கையின் போது ஒருவித மனப்போராட்டத்தை அனுபவிக்கின்றான். உடல் மற்றும் மனத்தளவு வாழ்க்கையைக் காட்டிலும் ஏதோ ஒரு சிறந்த, சீரிய குறிக்கோள் இருந்தாக வேண்டும் என்றும் இஃதனைத்திற்கும் பின்னர் உண்மையிலேயே திட்டவட்டமாக ஸத்தியமும், நல்லதுமான ஒன்று இருந்தாக வேண்டும் என்றும் எண்ணத் தொடங்குகிறான். எனவே அவன் இயற்கையாக அவனது அறிவைப் பயன்படுத்தி, உதவிக்கும் வழிகாட்டுதலுக்கும் தத்துவத்தின்பால் திரும்புகிறான்.

பூரணத்தை நோக்கிய ஆராய்ச்சியில் தத்துவம் தன்னளவில் இறுதியானதாகும். வெறும் தோற்றத்திலிருந்து மாறுபட்ட பூரண உண்மையை நோக்கிய ஆராய்ச்சி முதலிலும், பின்னர் பூரணப் பொருளை நோக்கியதாகவும் அது அமைகிறது. தத்துவம் பொருள்களைப் பற்றிய ஆராய்ச்சி மற்றும் அவை ஏன் இருக்கின்றன என்பது பற்றிப் பேசுகிறது. பகுத்தறிவை அது முறையாகப் பின்பற்றுகிறது. பகுத்தறிவு எதுவரை செல்லுமோ அது வரை தத்துவம் செல்லும். அங்கே அது நின்றுவிடும். மூன்று விஷயங்களைப் பற்றி அது ஆராய்கிறது. இறைவன், இயற்கை, மனிதன்; இயற்கையைப் பற்றி அது ஆராய்கிறது. அங்கே அது நின்றுவிடுகிறது. இம்மூன்றிற்கும் இடையில் உள்ள தொடர்பைப் பற்றி அது தெரிவிக்காது.

இங்கேதான் சமயம் புகுகிறது. இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையில் உள்ள தொடர்பை அது தெரிவிக்கிறது. இந்தத் தீர்வு காரண காரியம் இரண்டினையும் பற்றியது. ஒழுக்க ரீதியில் தத்துவமும் பகுத்தறிவும் அவனது நன்னடத்தையை உருவாக்குவதில் உதவி புரிகின்றன. ஆனால் நடைமுறையைப் பொறுத்தமட்டில் அவை பிரச்சினையைத் தீர்க்க முடியாமல் தோல்வி அடைகின்றன. இந்த இடைவெளியை சமயம் நிரப்புகின்றது. அது நம்பிக்கை, அனுபூதி என்ற இரண்டு தத்துவங்களின் அடிப்படையில் தொடங்குகிறது.

இறைவனிடம் நம்பிக்கை முதல் தேவை. அனுபூதியை ஒத்துக் கொள்ளுதல் இரண்டாவது தேவை. இந்த இரண்டு கொள்கைகளையும் நாம் ஒத்துக்கொண்டால் கடவுளைப் பற்றிய ஆராய்ச்சியில் நமக்கு ஒரு தெம்பும், நம்பிக்கையும் பிறக்கின்றன.

உணர்வில் இல்லாததும், புலன்களால் கண்டு பிடிக்கப்பட முடியாததுமான ஒரு பொருளை ஒத்துக் கொள்வதுதான் நம்பிக்கை எனப் பொருள்படுகிறது. கடவுள் மனம், புலன்களுக்கு எட்டும் ஒரு பொருள் அல்ல என்பதால், நம்பிக்கையினால் மட்டுமே மனிதன் கடவுளுடன் தொடர்பு வைக்க முடியும். கடவுளை அறிய மனிதன் முற்படுகையில் மறை நூல்களின் தேவையை அவன் உணருகிறான். அவை கடவுளிடமிருந்து வெளிவந்தவை, கடவுளை அடைவதற்கான வழியைக் காட்டவல்லவை.

இப்பொழுது சிந்திக்கும் மனிதன் கடவுளை அறிவதற்கு மறைநூல்களைப் படிப்பது மற்றும் அவற்றின் பொருளை உணர்வது அவசியம் என்பதை உணர்கிறான்.

மறைநூல்கள் என்ன சொல்கின்றன என்பதை உணர பகுத்தறிவு மற்றும் ஆராய்ச்சி இரண்டினுடைய உதவி தேவைப்படுகிறது.

பகுத்தறிவு கடவுளால் அருளப்பட்டதொரு ஆற்றலாகும். அதற்குச் சில கட்டுப்பாடுகள் உண்டு. சில கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டே அது பயன்படுத்தப்பட வேண்டும். மறை நூல்கள் தெரிவிக்கும் கூற்றுகளுக்கேற்ப அது செயல்பட வேண்டும். இந்தத் தகவல்கள் அனுபூதியின் அடிப்படையில் எழுந்தவை. பகுத்தறிவிற்கு அப்பாற்பட்டவை. நம்பிக்கையின் அடிப்படையில் ஒத்துக்கொள்ளப்பட வேண்டியவை.

இந்த வகையில் நமது பகுத்தறிவைப் பயன்படுத்தி, நாம் மறைநூல்கள் புகட்டும் அறிவைப் பெறுகிறோம். பார்த்தல், ஒப்பிடுதல் அல்லது பகுத்தறிதல் எதுவாகட்டும் - அறிவு என்பது நமது புத்தியின் செயற்பாடேயாகும். முதற்கண் அறியும் ஒன்று, பின் அறியப்படுபொருள், அதன்பின் அறியும் உயிருக்கும் அறியப்படுபொருளுக்கும் இடையே யான தொடர்பு இம்மூன்றையும் அது ஒத்துக்கொள்கிறது.

மனதின் செயல்பாட்டினால் உண்டாக்கப்பட்ட இந்தத் தொடர்பே அறிவாகும். அறிவிற்கு ஆதாரமான அடிப்படைத் தத்துவங்கள் புரிதற்கு அரியவை. விளக்கத்திற்கு அப்பாற்பட்டவை. அவற்றை அறிய முடியாது. நம்பத்தான் வேண்டும்.

மறைநூல்களை உள்ளபடியே புரிந்து கொள்வதானது, கடவுளைப் பற்றிய அறிவையும், கடவுளுக்கும் மனிதனுக்குமிடையேயான உறவைப் பற்றியும் நமக்குத் தெரிவிக்கிறது. இரண்டுமே அனுபூதியினால் கிடைக்கப் பெறுவனவாகும். வெறும் பகுத்தறிவை அடிப்படையாகக்

கொண்ட தத்துவத்தினின்று இறையியலான இது வேறுபட்டது.

கடவுளைப் பற்றிய அறிவைப் பொறுத்தமட்டில், உள்ளுணர்வாலோ, உள்ளூக்கத்தாலோ எந்தவிதமான இடைக் குறுக்கீடு எதுவுமின்றி கடவுளை நேருக்குநேர் உணரலாம் என்று நம்பும் தத்துவவாதிகளின் பிரிவு ஒன்று உள்ளது. எல்லா சமயங்களிலும் நேருக்குநேர் கடவுளைக் கண்டு உணர்ந்து அனுபவித்த ஞானிகள் உண்டு. பூரணப் பொருளைப் பற்றிய கருத்தால் உந்தப்பட்டு, இறைவன்பால் கொண்ட அன்பின் காரணமாக அனைத்து அறிவு மற்றும் கடமையையும், அவன்பால் கொண்ட அன்பின் காரணமாக எழும் உணர்விற்கு ஆட்படுவதேயாகும். இந்த வேதாந்தம் வழக்கமான விஞ்ஞான முறையைக் கணக்கிலெடுத்துக் கொள்வதில்லை. புலன்கள், பகுத்தறிவு அல்லது உள்ளுணர்வின் துணையின்றி நேரடியாக இறைவனை அடையமுடியும் என இது நம்புகிறது.

ஆனால், இத்தகைய நபர்கள் வெகு சிலரே. அவர்களது எண்ணிக்கை மிக மிக சொற்பமே. அவர்கள் சமய விற்பன்னர்களாகத் திகழ்கின்றனர். சாதாரண ஆற்றல்களுடன் திகழும் இறை நாட்டமுள்ள மனிதர்களுடன் அவர்களை ஒப்பிட முடியாது.

இவ்விதமாக சிந்திக்கும் மனிதன் இறைவனைப் பற்றிய தத்துவ ஆராய்ச்சியிலிருந்து, இறைவனுக்கும் அவனுக்குமிடையிலான உறவைக் காட்டும் சமயத்திற்கு வருகிறான். பிறகு பகுத்தறிவைப் பயன்படுத்தி எங்கும் நிறை பரம்பொருளை நேரடியாக உணர்வதற்கான சரியான அறிவைப் பெறுகிறான்.

அனைத்து சமயங்களுக்கும் பொதுவான தத்துவங்களைப் பயன்படுத்தி, நாம் கீழ்க்கண்ட கொள்கைகளை 'நமது இலட்சிய'மாகக் கொள்கிறோம்.

மனித வாழ்க்கையின் இலட்சியம் மோட்சம் அல்லது ஆன்மாவின் விடுதலையாகும். மோட்சம் என்றால் பிறப்பிறப்புச் சக்கரத்திலிருந்து விடுபடுவதேயாகும். இந்த விடுதலை மனிதன் அல்லது ஜீவன் ஆத்ம ஞானத்தை அடையும் பொழுதுதான் கிட்டும். அது வரை அவன் ஜனனமரணச் சுழலுக்கு உட்பட்டேயாக வேண்டும்.

ஜீவனின் குணாதிசயங்கள் மூன்று. இந்திரியம் (புலன்கள்) மனம், புத்தி (அறிவு).

கடவுளுடன் தொடர்புகொண்டு இம்மூன்றில் எதனுடனாவது ஜீவன் செயல்படுகையில்,

1) புலன்களால் செய்யப்படும் எதுவும் கர்மமாகிறது

2) மனதினால் எது சிந்திக்கப்பட்டாலும் அது உபாஸனை ஆகிறது.

3) புத்தியினால் அறியப்படும் எதுவும் ஞானமாகிறது

முந்தைய இரண்டும் நேரடியாக ஆத்ம ஞானத்தைத் தர இயலாது. ஆனால் மூன்றாவதாகிய ஞானத்தால் முக்தியைப் பெற இயலும்.

இந்த ஞானத்தை சாஸ்திரங்களைப் படிப்பதனால் மட்டுமே பெற முடியும். அவை பிரம்மனை விளக்கி அதை அறியும் வழியையும் கூறுகின்றன.

பிரம்மஞானத்தைப் பெறத் தகுதி உள்ளவன் சன்னியாசியே என சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஏனெனில் அவன் கர்மத்தையும், உபாஸனையும் கடந்து சாஸ்திரங்கள் சொல்வது என்ன என்பதைப் புரிந்து

கொள்வதற்காக அவனது அறிவுத் திறன் முழுவதையும் பயன்படுத்துகிறான். இவ்வாறாக, அவனது ஆற்றல் சிதறடையாது, அவனது உயர் மனம் ஒரு போக்கிலேயே போகும்.

ஆனால் ஏனையோர் விஷயத்தில் அவர்களால் தங்களது மானஸீக மற்றும் புலன் செயல்பாடுகளை முழுக்கவும் விட்டுவிட முடியாது. உலகப் பொருள்கள் மீது அவர்களுக்கு இன்னமும் நாட்டம் இருக்கிறது. அவர்களும் சாஸ்திரங்களைப் படிக்க வேண்டும். காலப்போக்கில் ஞான அம்சம் மென்மேலும் வலுவடையும். அவனைப் புலனின்பங்களிலிருந்து அப்பால் ஈர்த்து உயர் அறிவுப் பயிற்சிக்குத் தகுதி உள்ளவனாக்கும்.

எனவே,

1) மறைநூல்களில் நம்பிக்கை. இது கடவுளால் மனிதனுக்கு அருளப்பட்ட வரப்ரஸாதமாகும்.
2) குருவினால் புகட்டப்பட்ட நேரிய அறிவு
3) குருசேவை - இம்மூன்றே பிரம்மானந்தத்தை அடைய மூன்று வழிகளாகும்.

ஆத்மபோதத்தின் மார்க்கம் இதுவே. தன்னை அறிவதே அதாவது பரம்பொருளின் சாரமாக ஆவதுவே ‘அனுபவம்’ ஆகும்.

அதாவது ‘உன்னை அறிவாய்’ என்பது ‘நீயாக ஆவாய்’, ‘உன்னில் இருப்பாய்’ என்பதுவேயாகும்.

ஓம்

# ஸ்ரீ குருகீதை

## அத்யாயம் 1

**அசிந்த்யாவ்யக்தரூபாய நிர்குணாய குணாத்மனே ।**
**ஸமஸ்த ஜகதா தாரமூர்தயே ப்ரஹ்மணே நம : ॥ 1 ॥**

*1.* சிந்திக்க முடியாததும், தோன்றாததும், ஸத்வ, ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களுக்கு அப்பாற்பட்டதும், குணங்களின் சொரூபமானதும், தோன்றிய பிரபஞ்சத்தின் ஆதாரமாகவும் விளங்கும் பிரம்மனுக்கு வணக்கங்கள்.

*॥ ரிஷய ஊசு: ॥*

**ஸூத ஸூத மஹாப்ராக்ஞ நிகமாகமபாரக ।**
**குருஸ்வரூபமஸ்மாகம் ப்ரூஹி ஸர்வமலாபஹம் ॥ 2 ॥**

ரிஷிகள் சொன்னார்கள்:

2. ஸூதரே! அறிவிற் சிறந்தவரே, நிகம ஆகமங்களில் தேர்ச்சி பெற்றவரே! அனைத்து அசுத்தங்களையும் போக்கவல்ல குருவின் உண்மை சொரூபத்தை எங்களுக்கு தயவு செய்து எடுத்துரைப்பீராக.

குறிப்பு : ஆகமங்கள் என்பவை வேதங்கள் ஆகும். நிகமங்கள் என்பவை ஹிந்து சாஸ்திரங்களில் உள்ள சட்டங்கள் மற்றும் சம்பிரதாயங்களைப் பற்றிய உரைகளாகும். குரு என்ற வார்த்தையில் உள்ள 'கு' இருளையும், 'ரு' இருளை நீக்குதலையும் குறிக்கிறது.

யஸ்ய ச்ரவண மாத்ரேண தேஹீ துஃகாத்விமுச்யதே ।
யேன மார்கேண முனய: ஸர்வக்ஞத்வம் ப்ரபேதிரே ॥ 3 ॥

3. எதைக் கேட்பதனால் எல்லாத் துன்பங்களிலிருந்தும் மனிதன் விடுபடுகிறானோ, எந்தப் பாதையைக் கடைப்பிடிப்பதால் முனிவர்கள் அனைத்தையும் அறிந்த நிலையை அடைந்தார்களோ

குறிப்பு : இந்தக் கேள்வி தொடர்ந்து ஆறாவது சுலோகம் வரை போகிறது.

யத்ப்ராப்ய ந புனர்யாதி நர: ஸம்ஸாரபந்தனம் ।
ததாவிதம் பரம் தத்வம் வக்தவ்யமதுநா த்வயா ॥ 4 ॥

4. எதை அடைந்து மனிதன் மீண்டும் பிறப்பிறப்புச் சுழலில் சிக்கிக் கொள்வதில்லையோ, அந்த மேலான உண்மையை எங்களுக்கு தயவு செய்து உரைப்பீராக.

குஹ்யாத்குஹ்யதமம் ஸாரம் குருகீதா விசேஷத: ।
த்வத்ப்ரஸாதாச்ச ச்ரோதவ்யா தத்ஸர்வம் ப்ரூஹி ஸூத ந:
॥5॥

5. ஸூதரே! அவை அனைத்தையும், குறிப்பாக ரகசியங்களுள் அதிரகசியமான குருகீதையை உம்மிடம் கேட்க மிகவும் ஆவலாயுள்ளோம்.

இதி ஸம்ப்ரார்தித ஸூதோ முனிஸங்கைர் முஹுர்முஹு: ।
குதூஹலேன மஹதா ப்ரோவாச மதுரம் வச: ॥ 6 ॥

6. இவ்வாறு திரும்பத்திரும்ப முனிவர்களால் பிரார்த்திக்கப்பட்ட ஸூதர் மிகுந்த ஆர்வத்துடன் இந்த இனிய வார்த்தைகளைக் கூறலானார்.

*"ஸூத உவாச"*

**ச்ருணுத்வம் முனய : ஸர்வே ச்ரத்தயா பரயா முதா ।**
**வதாமி பவரோகக்னீம் கீதாம் மாத்ருஸ்வரூபிணீம் ॥ 7 ॥**

ஸூதர் சொன்னார்:

7. முனிவர்களே! சிரத்தையுடன் கேளுங்கள். எல்லா ஸம்ஸாரத் தொல்லைகளையும் இல்லாதாக்க வல்லதும், உங்கள் அனைவருடைய தாய்க்கு நிகரானதுமான கீதையை உங்களுக்குச் சொல்கிறேன்.

குறிப்பு : முன்பு பதினெட்டு புராணங்களும் சொல்லப் பட்ட புனித ஸ்தலமான நைமிசாரண்யத்தில் சிவ பெருமானுக்கும் பார்வதி தேவிக்கும் இடையில் நிகழ்ந்த சம்பாஷணை முனிவர்கள் ஸூதரிடம் கேட்ட ஒரு கேள்வியாக இங்கே இடம் பெறுகிறது.

**புரா கைலாஸசிகரே ஸித்த கந்தர்வஸேவிதே ।**
**தத்ர கல்பலதா புஷ்பமந்திரே அத்யந்தஸுந்தரே ॥ 8 ॥**

8. ஒரு சமயம் பூக்களாலும், பழங்களாலும், கொடிகளாலும் அழகு மிக்கதும் சித்தர்களாலும் கந்தர்வர்களாலும் ஸேவிக்கப்பட்ட கயிலைமலை சிகரத்தில்.

குறிப்பு : சித்தர்கள் என்பவர்கள் நிறைநிலை எய்தியவர்கள். சொர்க்கலோகத்தில் இசையில் தேர்ச்சி பெற்றவர்கள் கந்தர்வர்கள்.

**வ்யாக்ராஜினே ஸமாஸீனம் சுகாதி முனிவந்திதம் ।**
**போதயந்தம் பரம் தத்வம் மத்யே முனிகணே க்வசித் ॥9॥**
**ப்ரணம்ந வதனா சச்வந் நமஸ்குர்வந்தமாதராத் ।**
**த்ருஷ்ட்வா விஸ்மயமாபந்நா பார்வதீ பரிப்ருச்சதி ॥ 10 ॥**

9 & 10 புலித்தோலின் மீதமர்ந்து சுகர் போன்ற முனிவர்களால் சூழப்பட்டவராக ஒரு சமயம் சிவபெருமான்

மகத்தான உண்மையை ரிஷிகளுக்குச் சொல்லிக் கொண்டிருந்த பொழுது அவர் யாருக்கோ மிகுந்த பணிவுடன் நமஸ்காரம் செய்ததைப் பார்த்த பார்வதி தேவி அதைக் கண்டு மிகுந்த அதிசயமடைந்து அவரிடம் கேட்டாள்.

குறிப்பு : அடிக்கடி ரிஷி முனிவர்கள் கயிலைக்குச் சென்று சிவபெருமானுக்கு வணக்கம் செலுத்துவது வழக்கமாதலால் அது அவர்களுக்கு சத்சங்கத்திற்குரிய இடமாயிற்று.

*॥ பார்வத்யுவாச ॥*

**ஓம் நமோ தேவ தேவேச பராத்பர ஜகத்குரோ ।**
**த்வாம் நமஸ்குர்வதே பக்த்யா ஸுராஸுர நரா: ஸதா**
**॥11॥**

*11.* பார்வதி சொன்னாள் : தேவதேவனே! உமக்கு நமஸ்காரம். அகில உலகிற்கும் நீரே குரு. நீரே மேலானவர். உயர் ஞானத்தை நீர் புகட்டுகிறீர். தேவர்கள், அசுரர்கள் மற்றும் மனிதர்கள் உம்மைப் பணிவுடன் வணங்குகின்றனர்.

**விதி விஷ்ணு மஹேந்த்ராத்யைர்வந்த்ய : கலு ஸதா**
**நமஸ்கரோஷி கஸ்மை த்வம் நமஸ்காராச்ரய : கில**
***॥ 12 ॥***

*12.* பிரம்மா, விஷ்ணு, இந்திரன் முதலானோர் யாண்டும் உம்மை வணங்குகின்றனர். உமது நமஸ் காரத்திற்கு உரியவர் யார் என்பதை அறிய நான் விரும்புகின்றேன்.

உம்மால் வணங்கப்படத்தக்க உம்மைவிட மேலானவர் எவராவது உண்டா? எல்லா வணக்கத்திற்கும் உரிய ஒரே மேலான பரம்பொருள் நீர்தானே?

குறிப்பு : தமது பிரார்த்தனையின்போதோ அல்லது மற்றவேளைகளிலோ சிவபெருமான் யாருக்கோ வணக்கம் செய்வதை பார்வதி பார்த்திருக்க வேண்டும் என்பது இதனால் புலப்படுகிறது. புகழ்பெற்ற ஸ்ரீராமசரித மானஸிலும் ஸ்ரீதுளசிதாஸ்ஜி இதைப் போன்றதொரு எடுத்துக்காட்டைக் கொணருகிறார். அங்கும் பார்வதி தேவியினால் ஒரு ஐயம் கிளப்பப்படுகிறது. எல்லா தேவர்களுக்கும் மேலான உயர் தெய்வம் சிவபெருமானே என்பது பார்வதியின் முடிவு. அத்தகைய பகவானின் செய்கை அவளுக்கு ஆச்சரியமாயிருந்தது.

***த்ருஷ்ட்வைதத்கர்மம் விபுலமாஸ்சர்யம் ப்ரதிபாதி மே ।***
***கிமேதன்ன விஜானேஅஹம் க்ருபயா வத மேப்ரபோ***
***॥ 13 ॥***

*13.* உமது இந்தச் செயலைக் கண்டு நான் மிகவும் ஆச்சரியம் அடைகிறேன். என்னால் இதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. தேவா! எனது இந்த ஐயத்தைப் போக்கி அருளும்.

குறிப்பு : 'விபுலம்' என்ற வார்த்தை 'அதிகம்' என்றோ அடிக்கடி செய்யப்படுவதையோ குறிக்கிறது.

***பகவன் ஸர்வதர்மக்ஞ வ்ரதானாம் வ்ரத நாயகம் ।***
***ப்ரூஹி மே க்ருபயா சம்போ குருமாஹாத்ப்யமுத்தமம் ॥ 14 ॥***

*14.* எம்பெருமானே! அனைத்து தர்மங்களையும் உணர்ந்தவரே, சம்புவே! விரதங்களின் தலைவராகத் திகழும் குருவின் பெருமையை தயைகூர்ந்து எடுத்து ரைப்பீராக.

குறிப்பு : சாதகர்கள், இல்லறத்தார், காட்டுவாசிகள், துறவியர், பெண்கள், பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்ர போன்ற பலவகை வருணத்தார் ஆகியோருடைய

அனைத்து தர்மங்களையும் உணர்ந்தவர் சிவபெருமான் என்பதையே பன்மைப் பதம் உணர்த்துகிறது. இத்தகையவர் குருவின் பெருமையையும் உணர்ந்திருக்க வேண்டும். 'உத்தம' என்ற வார்த்தை 'சிறந்தது' என்பதைக் குறிப்பிடுகிறது.

**கேன மார்கேண போ ஸ்வாமின் தேஹீப்ரஹ்மமயோ பவேத் ।**
**தத்க்ருபாம் குரு மே ஸ்வாமின் நமாமி சரெணன தவ ॥ 15 ॥**

*15. எந்த ஒரு குறிப்பிட்ட மார்க்கத்தைக் கடைப்பிடிப்பதால் ஒரு ஜீவன் பிரம்மநிலையை அடைய முடியும்? நான் உம்மை வணங்குகிறேன். உமது பாதங்களை நான் நமஸ்கரிக்கிறேன். தயவு செய்து எனக்கு விளக்கி அருளும்.*

குறிப்புகள் : பகவானின் பாதங்களை வணங்குவது பாதபூஜை எனப்படுகிறது. பாதங்களை வணங்குவது என்பது சீடனின் பணிவையும் ஆர்வத்தையும் காட்டுகிறது. *"பாதோஸ்ய விஸ்வ பூதானி"* - அண்டம் முழுவதும் ஆண்டவனின் ஒரு அடியே (பாதமே) என புருஷஸூக்தம் கூறுகிறது. எனவே நீங்கள் பகவானின் பாதங்களைப் பூஜை செய்தால் அகில உலகையும், மனித சமுதாயத்தையும் வணங்கியவர்கள் ஆவீர்கள். குருவைப் பூஜித்தாலும் கிடைக்கும் பலனும் அதுவே. இதனது பலன் இந்த நூலின் பல சுலோகங்களில் எடுத்துரைக்கப்படுகிறது.

**இதி ஸம்ப்ரார்தித : சச்வன் மஹாதேவோ மஹேஸ்வர:।**
**ஆனந்த பரித : ஸ்வாந்தே பார்வதீமிதமப்ரவீத் ॥ 16 ॥**

*16. இவ்வாறு திரும்பத் திரும்ப பார்வதியால் வேண்டப்பட்டவுடன், மஹாதேவனாகிய சிவபெருமான்*

மகிழ்ச்சி பொங்கும் இதயத்துடன் கீழ்க்காணும் விதமாகப் பார்வதியை நோக்கிப் பேசலானார்:

குறிப்பு : தங்கள் மாணாக்கர்கள் தரமான கேள்விகளைக் கேட்கும்பொழுது ஆசிரியர்கள் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறார்கள். குருவின் இதயம் யாண்டும் நம்பகமான சீடர்களையே நாடுகிறது. அதுவே அவர்களது மகிழ்ச்சிக்கான காரணம். ஒருவன் நாடியதைப் பெறும் பொழுது அவன் மகிழ்ச்சி அடைவது சகஜமே. தாகத்தால் வருந்துபவன் தண்ணீராலும், பசியால் வாடுபவன் உணவாலும் திருப்தி அடைகிறான். தரமான தகுதியான சீடர்களைப் பார்த்தவுடன் தங்கள் ஞானத்தைப் பெறவல்லவர்கள் அவர்களே என்பதை அறிந்து குருமார்கள் மகிழ்ச்சி அடைகிறார்கள். •தரமான சிஷ்யனைப் பெறாமல் தமது ஞானத்தின் சுமையை ஒரு குரு உணர்கிறார். தரமான கேள்விகளை அந்த சிஷ்யன் ஆர்வத்துடன் கேட்கும் பொழுதும், தமது போதனைகளை அவன் கடைப்பிடிக்கும் பொழுதும் குரு மகிழ்ச்சி அடைகிறார்.

*|| ஸ்ரீ மஹாதேவ உவாச ||*

**ந வக்தவ்யமிதம் தேவி ரஹஸ்யாதி ரஹஸ்யகம் |**
**ந கஸ்யாபி புரா ப்ரோக்தம் த்வத்பக்த்யர்த்தம் வதாமி தத்**
**|| 17 ||**

17. மஹாதேவன் அருளினார் : "தேவி! இதுவே பரமரஹஸ்யமாகும். இது எவருக்கும் தெரிவிக்கப்படக் கூடாதது. இதுவரை நான் இதை யாருக்கும் வெளிப் படுத்தவில்லை. ஆனால் என்மீது நீ வைத்திருக்கும் பக்தியினால் நான் உனக்கு இதைச் சொல்லுகிறேன்."

குறிப்புகள் : பேருண்மைகளைக் கண்டவருக்கெல்லாம் எடுத்துரைக்கலாகாது.. ஆனால் தகுதியுடைய சீடர்களுக்கு

குரு தமது அன்பினாலும் கருணையினாலும் இந்த ரகசியங்களை எடுத்துரைக்கிறார். குருமார்களுக்கு சீடர்கள் பணிவிடை செய்கிறார்கள். பதிலாக குருமார்கள் சீடர்களுக்கு இத்தகைய ரகசியங்களை எடுத்துரைக் கிறார்கள். ஆனால் பக்தர் அல்லாத ஒருவருக்கு இத்தகைய ரகசியங்கள் ஒரு பொழுதும் சொல்லப்படுவதில்லை.

*ரஹஸ்யாதி ரஹஸ்யகம்* : குறிப்பாக சிலருக்குச் சொல்லப்படக்கூடிய சாதாரண ரகசியங்கள் சில உண்டு. ஆனால் மிகவும் அன்பிற்குப் பாத்திரமானவருக்கே சொல்லப்படக்கூடிய ரகசியங்கள் சிலவும் உண்டு. இத்தகையதொரு ரகசியத்தைத்தான் சிவன் பார்வதிக்கு எடுத்துரைக்க இருக்கிறார். மிகவும் உயர்தரமான சீடர்கள் கிட்டினால் ஒழிய, குருமார்கள் இந்த ரகசியங்களை வெளிவிடுவதில்லை. அவை ரகசியங்களாகவே இருந்து விடுகின்றன.

**மமரூபாஸி தேவி த்வமதஸ் தத்கதயாமி தே ।**
**லோகோபகாரக: ப்ரச்னோ ந கேனாபி க்ருத: புரா ॥18॥**

18. தேவியே! எனது இன்னொரு சொரூபமே நீ. உன்னைத் தவிர வேறு எவரும் இதுபோல் என்னிடம் கேட்டதில்லை. உனது இந்தக் கேள்வி அகில உலகிற்கும் நலம் பயப்பதாகும். எனவே, இதை உனக்கு நான் கூறுகிறேன்.

குறிப்புகள் : உலகின் நன்மையைக் கருதி ஜகத் மாதாவாகிய பார்வதி தேவி இந்தக் கேள்வியைக் கேட்டிருக்கிறாள். அகில பிரபஞ்சமும் அவளுக்குப் பிரியமானதுதான். அன்னையைத் தவிர குழந்தையின் நலத்தில் அதிக அக்கரை காட்டுவது யார்? இவ்வுலகில் அன்னையின் அன்பிற்கு ஈடானது வேறு எதுவும் இல்லை. ஏனையது அனைத்தும் இதற்குப் பிறகுதான் வருகிறது.

**யஸ்ய தேவே பரா பக்திர் யதா தேவே ததா குரௌ |**
**தஸ்யைதே கதிதா ஹ்யர்த்தா: ப்ரகாசந்தே மஹாத்மன:**
**|| 19 ||**

*19.* யார் இறைவனிடம் மேலான பக்தி கொண்டிருக்கிறார்களோ, அதே பக்தியை குருவிடமும் கொண்டு விளங்குகிறார்களோ, அத்தகையவருக்கே இதில் கூறப்பட்டுள்ள உண்மைகள் தெளிவாகப் புலப்படும்.

குறிப்புகள் : இந்த சுலோகம் ஸ்வேதாஸ்வர உபநிஷதத்தின் இறுதியில் காணப்படுகிறது. எனவே பகவானால் இது ப்ரமாணமாக இங்கே எடுத்துக் காட்டப்படுகிறது.

குருவிடம் நாம் எத்தகைய பக்தி கொண்டு விளங்க வேண்டும் என்பதை இந்த சுலோகம் நமக்கு எடுத்துரைக்கிறது. குருவிற்கும் கடவுளுக்கும் இடையே எவ்வித பேதமும் கிடையாது. இந்த எண்ணம் சீடனின் மனத்தில் உறுதி அடையும்பொழுதுதான் அவனது ஆன்மீக முன்னேற்றம் சுலபமானதாகவும், நிச்சயமானதாகவும் ஆகிறது.

**யோ குரு : ஸ சிவ : ப்ரோக்தோ ய: சிவ : ஸ குரு :**
**ஸ்மிருத:|**
**விகல்பம் யஸ்து குர்வீத ஸ நரோ குருதல்பக : || 20 ||**

*20.* யார் குருவோ அவரே சிவன். இதைத்தான் மறை நூல்கள் அனைத்தும் தெரிவிக்கின்றன. சிவனே குரு என்ற உண்மை அனைத்து ஸ்மிருதிகளிலும் நமக்கு உணர்த்தப்படுகின்றன. இவ்விருவருக்கும் இடையே வேறுபாடு பாராட்டுபவன் அவனது குருபத்னியுடன் தகாத முறையில் நடந்த பாபத்தைப் புரிந்தவனாவான்.

குறிப்புகள் : இந்த சுலோகம் குருவின் அவசியம் குறித்தும், சிவனுடன் அவருக்குள்ள ஒற்றுமை குறித்தும் கூறுகிறது. இருவருக்கும் இடையில் வேற்றுமை கற்பிப்பது மன்னிக்க முடியாத குற்றம் என்பது சுலோகத்தின் இரண்டாவது வரியில் எடுத்துக்காட்டப்படுகிறது.

**துர்லபம் த்ரிஷு லோகேஷு தச்ச்ருணுஷ்வ வதாம்யஹம்**
**குருப்ரஹ்ம விநா நான்ய : ஸத்யம் ஸத்யம் வரானனே**
**॥ 21 ॥**

21. பார்வதியே! குருவே பிரம்மம்; பிரம்மனைத் தவிர வேறில்லை. உனக்கு இந்த உண்மையை நான் கூறுகிறேன். எனது வார்த்தைகளைக் கேள். அதை நம்புவாயாக. ஏனெனில் மூவுலகிலும் வேறு யாருக்கும் இந்த உண்மை தெரியாதது ஒன்றாகும்.

குறிப்புகள் : 'துர்லபம்' என்றால் 'அரிய' என்று பொருள். 'குருவே பிரஹ்மன்'என்ற சொற்றொடரை அது குறிக்கிறது. உண்மையிலேயே தகுதி வாய்ந்தவரும், பிரம்ம ஞானத்தை அளிக்கவல்லவருமாகிய குரு அரிது. அவரைக் காண்பது மிகவும் கடினம். குறிப்பாக இறையருள் இன்றி அது இயலாது.

**வேத சாஸ்த்ர புராணானி சேதி ஹாஸாதிகானி ச ।**
**மந்த்ரயந்த்ராதி வித்யானாம் மோஹனோச்சாடனாதிகம்**
**॥ 22 ॥**

**சைவ சாக்தாகமாதீனி ஹ்யன்யே ச பஹவோ மதா : ।**
**அபப்ரம்சா : ஸமஸ்தானாம் ஜீவானாம் ப்ராந்த சேதஸாம்**
**॥ 23 ॥**

22 & 23 வேதங்கள், சாஸ்திரங்கள், புராணங்கள், இதிகாஸங்கள், மந்திரம், யந்திரம், மோஹனம் மற்றும் உச்சாடன முறைகள், சைவம், ஆகமம், சாக்தம் போன்ற இன்றைய உலகில் நடைமுறையில் உள்ள அத்தனை

பிரிவுகளும் அறியாத மற்றும் மயங்கிய மதியினரைக் குழப்பத்தில் ஆழ்த்தும் பொய்யான கொள்கைகளேயாகும்.

குறிப்புகள் : இந்த சுலோகத்தின் இறுதிப் பகுதி அடுத்த சுலோகத்தில் வருகிறது. மேலாகப் பார்க்கையில் இது சாஸ்திரங்களைக் கண்டிப்பது போலத் தோன்றுகிறது. ஆனால் இந்த சுலோகங்களின் நோக்கம் அதுவல்ல.

இங்கு குறிப்பிடப்பட்டுள்ள மறைநூல்கள் ஹிந்து மதத்தின் ஆதாரமான மற்றும் அதன் பல்வேறு பிரிவுகளுக்கும் அடிப்படையாக அமையும் பல்வேறு படைப்புகளாகும்.

**ஜபஸ்தபோ வ்ரதம் தீர்த்தம் யக்ஞோ தானம் ததைவ ச ।**
**குரு தத்வம விக்ஞாய ஸர்வம் வ்யர்த்தம் பவேத்ப்ரியே**
*॥ 24 ॥*

24. ஜபம், தபம், வ்ரதம், தீர்த்தயாத்திரை, யக்ஞம், தானம் இவை அனைத்தும் குருதத்துவத்தை அறியாத வரை வீணே.

**குருபுத்யாத்மனோ நாந்யத் ஸத்யம் ஸத்யம் வரானனே ।**
**தல்லாபார்த்தம் ப்ரயத்னஸ்து கர்தவ்யஸ்ச மனீஷிபி: ॥ 25 ॥**

25. பார்வதியே ! குருவிற்கும் ஆத்மாவிற்கும் இடையில் எவ்வித வேறுபாடும் கிடையாது என்பதை நான் ஆணித்தரமாகக் கூறுகிறேன். எனவே சாதகர்களாலும், மறைநூல்களைக் கற்றவர்களாலும், அறிஞர் பெருமக்களாலும் அதை அடைவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

குறிப்புகள் : ஞானத்தைப் பெறுவதற்கான ஒரே வழி தகுதியுள்ள குருவை அடைவதேயாகும். எனவே

குருவிற்கும் ஆத்மஞானத்திற்கும் இடையே எவ்வித வேற்றுமையும் கிடையாது.

**கூடாவித்யா ஜகன்மாயா தேஹஸ்சாக்ஞானஸம்பவ: ।**
**விக்ஞானம் யத்ப்ரஸாதேன குருசப்தேன கத்யதே ॥ 26 ॥**

26. மறைந்துள்ள அக்ஞானம், ஆத்ம ஞானமின்மை, உலகம், மாயை, சரீரம் இவை அனைத்தும் அக்ஞானத்தால் உண்டாகின்றன. எவரது அருளால் ஒருவனுக்கு நேரடியாக ஆத்மஞானம் கிட்டுகிறதோ அவரே 'குரு' எனப்படுகிறார்.

**யதங்ரிகமலத்வந்த்வம் த்வந்த்வதாப நிவாரகம் ।**
**தாரகம் பவஸிந்தோஸ்ச தம் குரும் ப்ரணமாம்யஹம் ॥ 27 ॥**

27. எதிரிடை இரட்டைகளால் ஏற்படும் எல்லாத் துன்பங்களையும் எவரது தாமரை மலருக்கிணையான இரண்டு பாதங்கள் போக்க உதவுகின்றனவோ, பிறப்பிறப்புச் சக்கரத்திலிருந்து எவர் காப்பாற்றுகிறாரோ அந்த குருவை நான் வணங்குகின்றேன்.

**தேஹீப்ரஹ்ம பவேத்யஸ்மாத் த்வத்க்ருபார்த்தம் வதாமிதத் ।**
**ஸர்வபாப விசுத்தாத்மா ஸ்ரீகுரோ: பாதஸேவனாத் ॥ 28 ॥**

28. எதனால் உடல் எடுத்த இந்த ஆன்மா எல்லாப் பாபங்களிலிருந்தும் தூய்மை அடைந்து பிரம்மனாக ஆகிறது என்பதை நான் உனக்குக் கூறுவேன். உன்பால் எனக்கு உள்ள பிரத்யேக அன்பின் காரணமாக நான் இதைக் கூறுகிறேன்.

குறிப்புகள் : உடல் தொண்டு, கற்றல், சாஸ்திரத்தைக் கற்பித்தல் மற்றும் குருவினைத் திருப்திப்படுத்தும் அனைத்துச் செயல்களும் - குறிப்பாக ஆர்வமுள்ள தகுதியான சாதகர்களுக்கு குருவின் போதனைகளைப்

பிரச்சாரம் செய்தல் போன்றவை அனைத்தும் குருசேவையில் அடங்கும்.

இலட்சிய சீடன் ஒருவன் கடவுளுக்கும் குருவிற்கும் இடையே எவ்வித வேறுபாட்டையும் காண்கிறானில்லை. குருவை வணங்குவது இறைவனை வணங்குவதற்கு நிகர். இருவருக்கும் இடையில் ஏதாவது வேறுபாடு பாராட்டுபவர் குரு, கடவுள் இருவரிடமும் உண்மையான பக்தி அற்றவர் ஆவர்.

**ஸர்வ தீர்த்தாவகாஹஸ்ய ஸம்ப்ராப்னோதி பலம் நர: |**
**குரோ: பாதோதகம் பீத்வா சேஷம் சிரஸி தாரயன் || 29 ||**

29. குருவின் புனித பாதங்களைக் கழுவிய ஜலத்தைக் குடித்து, மீதியைத் தலையில் தெளித்துக் கொள்வதானது அனைத்துப் புனித தலங்களிலும் உள்ள புனித நதிகளில் நீராடிய பலனை ஒக்கும்.

குறிப்புகள் : இதில் காணப்படும் போதனைகளை ஒருவன் உண்மையாகக் கடைப்பிடித்தால், அதில் குறிப்பிட்டுள்ள பலன்களையும் ஒருவன் அடைகிறான். அது வீண்புகழ்ச்சியோ, மிகையான கூற்றோ அல்ல. அறியாத ஆன்மாக்களை தவறான வழியில் செலுத்தி இறைவன் அடையப் போவதென்ன?

**சோஷணம் பாபபங்கஸ்ய தீபனம் ஞானதேஜஸ : |**
**குரோ: பாதோதகம் ஸம்யக் ஸம்ஸாரார்ணவதாரகம்**
**|| 30 ||**

30. குருவின் பாதங்களைக் கழுவிய (சரணாமிருதம்) நீரானது சீடனுடைய அனைத்துப் பாபங்களையும் பொசுக்கி, ஞான விளக்கினைத் தூண்டி, சம்ஸாரக் கடலினின்று அவனைக் காக்க வல்லதாகிறது.

**அக்ஞான மூலஹரணம் ஜன்மகர்மநிவாரகம் ।**
**ஞானவைராக்யஸித்த்யர்த்தம் குருபாதோதகம் பிபேத் ॥ 31॥**

31. அக்ஞானத்தை இல்லாதாக்கவும், கர்மம், பிறப்பு, இறப்புச் சுழலிலிருந்து விடுபடவும், ஆத்மஞானம் மற்றும் வைராக்கியத்தைப் பெறுவதற்காகவும் ஒருவன் குருவின் பாதங்களைக் கழுவிய சரணாமிருதத்தைப் பருக வேண்டும்.

**குருபாதோதகம் பானம் குரோருச்சிஷ்டபோஜனம் ।**
**குரூர்மூர்தே: ஸதாத்யானம் குரோர் நாம்ன:**
**ஸதாஜப : ॥ 32 ॥**

32. ஒருவன் யாண்டும் குருவின் பாதநீரைப் பருக வேண்டும். • தனது குருவின் நாமத்தை ஸதா ஜபிக்க வேண்டும். குருவின் திரு உருவத்தை ஸதா தியானிக்க வேண்டும். குரு சாப்பிட்ட மிச்சத்தைச் சாப்பிட வேண்டும்.

குறிப்புகள் : இவையெல்லாம் சீடனின் அனன்ய சிந்தனையையும், குருவின் மீது அவன் கொண்டுள்ள ஆழ்ந்த பக்தியையும் காட்டுகிறது.

**ஸ்வதேசிகஸ்யைவ ச நாமகீர்த்தனம்**
**பவேதனந்தஸ்ய சிவஸ்ய கீர்த்தனம் ।**
**ஸ்வதேசிகஸ்யைவ ச நாம சிந்தனம்**
**பவேதனந்தஸ்ய சிவஸ்ய சிந்தனம் ॥ 33 ॥**

33. ஒருவனது குருவின் நாமத்தை கீர்த்தனை செய்தல் பரம்பொருளான சிவனைக் கீர்த்தனை செய்வதற்கு நிகர். ஒருவனது குருவின் பெயரை தியானித்தல் சிவ தியானமாகவே ஆகிறது.

**யத்பாதரேணுர்வை நித்யம் கோபி ஸம்ஸாரவாரிதௌ ।**
**ஸேதுபந்தாயதே நாதம் தேசிகம் தமுபாஸ்மஹே ॥ 34 ॥**

34. எவரது பாததூளியானது ஸம்ஸார சாகரத்தைக் கடக்க உதவுகிறதோ அந்த ஸத்குருவாகிய தேசிகனை நான் வணங்குகிறேன்.

குறிப்புகள்: நாம் புரிந்துகொண்டு நமது அன்றாடவாழ்வில் உணர்ந்து கொள்ளத் தக்கவாறு எவர் நமது புத்திக்கு எட்டும் வகையில் உண்மையை விளக்குகிறாரோ அந்த ஆசிரியருக்கு 'தேசிகன்' என்று பெயர்.

யதனுக்ரஹமாத்ரேண சோகமோஹோ விநச்யத :।
தஸ்மை ஸ்ரீ தேசிகேந்த்ராய நமோரஸ்து பரமாத்மனே
॥ 35 ॥

35. யாருடைய ஆசீர்வாதத்தால் சோகம், மோகம் ஆகிய இரண்டும் அழிந்துபோகிறதோ அந்த பரமாத்ம சொரூபமான குருவிற்கு நமஸ்காரம்.

யஸ்மாதனுக்ரஹம் லப்த்வா மஹதஞ்ஞானமுத்ஸ்ருஜேத் ।
தஸ்மை ஸ்ரீ தேசிகேந்த்ராய நமஸ்சாபீஷ்டஸித்தயே ॥ 36 ॥

36. நான்கு புருஷார்த்தங்களாகிய தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷத்தை (அறம், பொருள், இன்பம், வீடு) எவர் அருளுகிறாரோ, எவரது அருளினால் மனிதன் அக்ஞானத் தளைகளிலிருந்து விடுபடுகிறானோ அந்த குருவிற்கு எனது நமஸ்காரம்.

காசீ க்ஷேத்ரம் நிவாஸஸ்ச ஜாஹ்னவீ சரணோதகம் ।
குருர்விஸ்வேஸ்வர : ஸாக்ஷாத் தாரகம் பிரஹ்மநிஸ்சயம்
॥ 37 ॥

37. எங்கு குரு வசிக்கிறாரோ அதுவே காசிக்ஷேத்திரம் அவரது சரணாமிருதமே (பாதம் கழுவிய நீர்) கங்கை ஜலம். குருவே ஸாக்ஷாத் விஸ்வநாதர். அவரது வார்த்தைகளே தாரக ப்ரம்மமாகும்.

குருஸேவா கயா ப்ரோக்தா தேஹ : ஸ்யாதக்ஷயோ வட :।
தத்பாதம் விஷ்ணுபாதம் ஸ்யாத் தத்ர தத்த மனந்தகம் ॥38॥

38. குருவிற்குச் செய்யும் தொண்டே கயாக்ஷேத்ரம். அவரது உடம்பே அக்ஷய வடம் என்ற ஆலமரம். அவரது பாதங்களே ஸ்ரீமஹா விஷ்ணுவின் சரணங்கள். குருவின் பாதங்களில் சமர்ப்பிக்கப்பட்ட எந்தப் பொருளும் அளவற்ற பலனைக் கொடுக்கிறது.

குறிப்புகள் : குருவினிடம் ஒருமுகப்பட்ட பக்தியும், தளராத நம்பிக்கையும் கொண்ட இலட்சிய சீடனுக்கு, குருவே பிரம்மா, குருவே விஷ்ணு, குருவே சிவன், தவிர காசி, கயா போன்ற அனைத்து தீர்த்தயாத்திரை ஸ்தலங்களும் அவரே. அவனது குருவைத் தவிர வேறு புண்ணிய க்ஷேத்திரம் எதுவும் கிடையாது. தன் குருவினிடமே அவன் காசி, கயா, மதுரா, விருந்தாவன், வைகுண்டம், மோக்ஷம் முதலியவற்றைக் காண்கிறான். இத்தகைய குரு பக்தி மிகவும் அரிது. இறைவனது அருளின்றி அதைப் பெற முடியாது.

குருர்மூர்த்தி ஸ்மரேன்நித்யம் குரோர் நாமஸதா ஜபேத் ।
குரோராக்ஞாம் ப்ரகுர்வீத குரோரன்யம் ந பாவயேத்
॥39॥

39. சீடன் எப்பொழுதும் குருவின் திருவுருவத்தையே தியானிக்க வேண்டும். அவன் யாண்டும் குருவின் திருநாமத்தையே உச்சரிக்க வேண்டும். சதா அவன் குருவின் கட்டளைகளையே நிறைவேற்ற வேண்டும். குருவைத் தவிர வேறு எவரையும் அவன் நினைக்கக் கூடாது.

குறிப்புகள் : ஆன்மீக உதவிக்கும் சாதனைக்கும் உறுதுணையாயிருக்கும் வகையில் ஒரே குருவிடமே சீடன் பக்தியுடன் திகழ வேண்டும் என்பதே இதன் கருத்து.

சத்சங்கம் மற்றும் சாஸ்திர அறிவைப் பெறுதல் போன்றவற்றை இது புறக்கணிக்கவில்லை. உண்மை உணரப்படும்பொழுது அங்குமிங்கும் அலைய வேண்டிய அவசியம் இல்லாது போய்விடுகிறது.

*குருவக்த்ரே ஸ்திதம் பிரம்ம ப்ராப்யதே தத்ப்ரஸாதத: |*
*குரோர்த்யானம் ஸதா குர்யாத் குலஸ்திரீஸ்வ பதிம்யதா*
*|| 40 ||*

*40.* குருவின் நாக்கு அல்லது சரஸ்வதி நாடியில் பிரம்மன் வசிக்கிறார். குருவின் கிருபையினால் சீடர்கள் பிரம்மனை அடைகிறார்கள். பதிவிரதா ஸ்திரீ தன் கணவனையே யாண்டும் நினைந்து நிற்பதுபோல், எப்பொழுதும் ஒருவன் தன் குருவையே தியானிக்க வேண்டும்.

குறிப்புகள் : கீழே காணப்படும் 43வது சுலோகத்தைப் பார்க்கவும். குருவின் நாக்கு நுனியில் பிரம்மா வாசம் செய்கிறார். எனவே அவரது பேச்சு பிரம்ம அல்லது சிதானந்த அமிருதம் அடங்கியது. விவேக சூடாமணி 41வது சுலோகத்தில் ஸ்ரீசங்கராச்சாரியர் குறிப்பிடுவது போல "பிரம்மானந்த -ரஸ -அனுபூதி - கலிதம்" அது.

*ஸ்வாச்ரமம் ச ஸ்வஜாதிம் ச ஸ்வகீர்த்திப் புஷ்டிவர்தனம் |*
*ஏதத்ஸர்வம் பரித்யஜ்ய குருமேவ ஸமாச்ரயேத் || 41 ||*

*41.* ஒருவன் தனது ஜாதி, கீர்த்தி, சமூகத்தில் அவனுக்கிருக்கும் புகழ், மற்றும் உலக கவர்ச்சிகளை விட்டு விட்டு யாண்டும் குருவையே சார்ந்திருக்க வேண்டும்.

குறிப்புகள் : உலகத்தை விடுத்து குருவிடமே சரணடையும் முழுநேர சாதகர்களுக்கே இது பொருந்தும்.

ஆன்மீகப் பாதைக்குப் புதிதாய் உள்ள சாதகர்கள் குருவின் துணையையும், இடையறாத தொடர்பையும் நாட வேண்டும். குருவினால் தகுந்த முறையில் வழிநடத்தப்படாவிட்டால், மாணவர்கள் வைராக்யம் தளருகின்றபொழுது வழி தவறிப் போக நேரிடும். சாதனையும் மங்கி விடும்.

***அனன்யாஸ் சிந்தயந்தோ யே ஸுலபம் பரமம் ஸுகம் /***
***தஸ்மாத் ஸர்வப்ரயத்னேன குரோராரா தனம் குரு ॥ 42 ॥***

42. உலக எண்ணங்களை முற்றிலுமாக விடுத்து தனது கவனத்தையும் எண்ணங்களையும் குருவிடமே செலுத்தியவனாக ஒருவன் எளிதில் பரமானந்தத்தை அடைகிறான். எனவே முடிந்த வகையில் எல்லாம் உங்கள் குருவை வணங்குங்கள்.

குறிப்புகள் : குருவுக்கு ஒருவன் செய்யும் தனிப்பட்ட தொண்டு, குருவின் இலட்சிய வாழ்வின் அடிப்படையில் வாழ்தல், தன் வாழ்நாள் முழுவதும் குருவின் உபதேசங்களைப் பரப்புதல் ஆகிய அனைத்தும் குருவழிபாட்டில் அடங்கும். குருவின் போதனைகளையும் கருத்துக்களையும் எதிர்க்காமலிருத்தலும் குரு வழிபாட்டில் அடங்கும்.

***குருவக்த்ரே ஸ்திதா வித்யா குரு பக்த்யா ச லப்யதே /***
***த்ரைலோக்யே ஸ்புடவக்தாரோ தேவர்ஷிபித்ரு***
***மானவா :॥ 43 ॥***

43. குருபக்தியினால் குரு பெற்றிருக்கும் அறிவை சீடர்களும் பெறுகின்றனர். தேவரிஷிகள், முன்னோர் மற்றும் கற்றோர் உலகம் ஆகிய மூவுலகிலும் இந்த உண்மை தெளிவாகக் கூறப்படுகிறது.

குறிப்புகள் : தங்களது குருவிடம் அவர்கள் கொண்டு விளங்கிய பக்தியினால் தாங்கள் விரும்பியதனைத்தையும் பெற்ற சீடர்களது சான்றுகளை சரித்திரம் நிறைய எடுத்துக்காட்டும். ஒருமுக பக்தி கொண்ட சீடனை தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களும் நாடுகின்றன. ஏகலைவன், உத்தங்கர், அர்ஜுனன் மற்றும் தோடகாச்சாரியார் (உலகப் புகழ்பெற்ற ஸ்ரீ சங்கராச்சாரியாரின் சீடர் மற்றும் அத்வைத வேதாந்த நிபுணர்) ஆகியோரது பக்தி சரித்திரத்தின் ஏடுகளில் பொறிக்கப்பட்டிருக்கிறது. குருபக்தியின் பெருமையைப் பற்றி எவரும் எள்ளளவும் சந்தேகிக்கவே வேண்டாம். இதிலே மிகைப்படுத்தவும் தேவையில்லை. தற்காலத்திலும்கூட சிடர்களின் வாழ்வில் குருபக்தி நிகழ்த்தும் பல நிகழ்ச்சிகள் நிகழ்ந்துள்ளன.

இறைவனது கிருபை மற்றும் சீடனின் சொந்த பக்தி மற்றும் தகுதிகளினாலேயே அனுபூதி அடைந்த பிரம்மஞானியான குருவை ஒருவன் பெறமுடியும்.

குரு கிருபையும் ஈசுவர கிருபையும் ஒன்றையொன்று சார்ந்தவை. எது முந்தும் எனக் கூறுவது கடினம். ''குருவும் கோவிந்தனும் என் முன்னே உளர். யாரை நான் வணங்குவேன்? உண்மையில் குருவே பெரியவர். ஏனெனில், அவரருளாலேயே எனக்கு கோவிந்தனின் காட்சி கிட்டியது'', என்று பக்த கபீர்தாஸர் கூறுகிறார். எனவே இக்கால நிகழ்ச்சிகளும் வேத கால உதார ணங்களும் குருபக்தியின் பெருமையைப் பறைசாற்று கின்றன.

**குகாரஸ்சாந்தகாரோ ஹி ருகாரஸ்தேஜ உச்யதே ।**

**அக்ஞானக்ராஸகம் பிரம்ம குருரேவ ந சம்சய: ॥ 44 ॥**

44. 'கு' என்ற எழுத்து இருளையும், 'ரு' என்ற எழுத்து அந்த இருளைப் போக்குவதையும் குறிக்கிறது. இருளை விழுங்கவல்ல பிரம்மன் உண்மையிலேயே குரு ஆவார்.

*குகாரோ பவரோக: ஸ்யாத் ருகாரஸ்தன்னிரோதக்ருத் |*
*பவரோக ஹரத்வாச்ச குருரித்யபிதீயதே || 45 ||*

45. ''குகாரம்'' என்பது பிறப்பிறப்புப் பிணியாகும். ''ருகாரம்'' என்பது பிறப்பிறப்பினை அழிப்பதாகும். பிறப்பிறப்பு வியாதியை அழிக்க வல்லவர் ஆகையால், ஆசிரியர் 'குரு' என்று அழைக்கப்படுகிறார்.

*குகாரஸ்ச குணாதீதோ ரூபாதீதோ ருகாரக: |*
*குணரூபவிஹீனத்வாத் குருரித்யபிதீயதே || 46 ||*

46. 'கு' என்ற எழுத்து அவர் முக்குணங்களையும் கடந்தவர் என்பதையும், 'ரு' என்ற எழுத்து அவர் உருவங்களைக் கடந்தவர் என்பதையும் குறிக்கிறது. குணங்களையும் ரூபங்களையும் கடந்தவர் அவர் என்பதால் குரு என்று அழைக்கப்படுகிறார்.

*குகார: ப்ரதமோ வர்ணோ மாயாதி குணபாஸக: |*
*ருகாரோ அஸ்தி பரம்ப்ரம்ம மாயாப்ராந்தி விமோசனம்*
*|| 47 ||*

47. முதலெழுத்தான 'கு' மாயையையும் குணங்களையும் தோற்றத்திற்குக் கொண்டு வருகிறது. மாயையையும் மயக்கத்தையும் (நான் உடல், நான் மனம் போன்றவை) போக்கும் 'ரு' பரப்பிரம்மமாகும்.

*ஏவம் குருபதம் ச்ரேஷ்டம் தேவானாமபி துர்லபம் |*
*குருடோரக கந்தர்வ ஸித்தாதிஸுர பூஜிதம் || 48 ||*

48. இவ்வாறு குருவின் நிலையானது உயர்ந்தது. சிரேஷ்டமானது. தேவர்களுக்கும் அரிதான பெருநிலை

அது. பல்வேறு ஸித்தர்களும், 'ஹாஹா, ஹூஹூ, கந்தர்வர்களும் அரிய இந்த குருநிலையைப் புகழ்ந்து பாடுகின்றனர்.

குறிப்புகள் : 'ஹாஹா - ஹூஹூ' என்பது அழகிய தோற்றம் கொண்ட கந்தர்வர்களில் ஒரு முக்கிய பிரிவினரைக் குறிக்கும்.

**த்ருவம் தேவி முமுக்ஷூணாம் நாஸ்தி தத்வம் குரோ: பரம் ।**
**குரோராராதனம் குர்யாத் ஸ்வஜீவத்வம் நிவேதயேத் ॥ 49 ॥**

49. குரு தத்துவம் மேலானது. குருவினும் சிறந்தது வேறு எதுவுமில்லை. ஒருவன் தனது குருவை வணங்க வேண்டும். தனது மனம், வாக்கு, காயத்தை குருவிற்கு அர்ப்பணிக்க வேண்டும்.

குறிப்புகள் : மிகவும் மேலான பிரம்ம ஞானத்தை பெற வேண்டி குருவினிடம் சீடன் நிபந்தனையற்ற சரணாகதி அடைய வேண்டும்.

**ஆஸனம் சயனம் வஸ்த்ரம் வாஹனம் பூஷணாதிகம் ।**
**ஸாதகேன ப்ரதாதவ்யம் குருஸந்தோஷ காரணம் ॥ 50 ॥**

50. குருவை சந்தோஷப்படுத்தும் வகையில் சீடன் அவருக்கு இருக்கைகள், படுக்கை, வாஹனம், உடை, மற்றும் ஆபரணங்களை அளிக்க வேண்டும்.

குறிப்புகள் : இங்கே குறிப்பிடப்படுவது குறிப்பாக இல்லற சீடர்களுக்கே பொருந்தும். ஏனெனில் அவர்களால் தான் குருவிற்கு இத்தகைய பொருள்களை அளிக்க இயலும். 41ம் சுலோகம் குருவுடனேயே முழுநேரமாக தியாக வாழ்க்கை வாழும் சீடர்களைப் பற்றிக் குறிப்பிட்டது.

**கர்மணா மனஸா வாசா ஸர்வதா ஆராதயேத் குரும் ।**
***தீர்க்கதண்டம் நமஸ்க்ருத்ய நிர்லஜ்ஜோ குருஸந்நிதௌ ॥ 51॥***

51. குருவின் முன்னர் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து ஒருவன் தனது சிந்தனை, சொல், செயலால் எப்பொழுதும் குருவைப் பணிய வேண்டும். இத்தகைய நமஸ்காரம் செய்வதற்கு அவன் ஒருபொழுதும் வெட்கப்படக் கூடாது.

குறிப்புகள்: ''தண்டவத்'' என்பது ஒரு கம்பு எப்படி டபார் என்று கீழே விழுமோ அதுபோல சீடனும் குருவின் முன் பணிவுடன் நமஸ்கரிக்க வேண்டும். எல்லாவிதமான வெட்கத்திலிருந்தும் சீடன் விடுபட வேண்டும். அவனிடம் ஆணவம் இருக்கக் கூடாது. இதுபோல அவன் கடவுள் முன்னும் வணங்க வேண்டும். சிலர் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்ய வெட்கப்படுகின்றனர். இத்தகைய நமஸ்காரம் சீடன் ஆணவமற்று, குருவிடம் பணிவு கொண்டு, சுயநலமற்று அவரது விருப்பங்கள் அனைத்தையும் நிறைவேற்றத் தயாராயுள்ளான் என்பதைக் காட்டுகிறது.

*சரீரமிந்திரியம் ப்ராணமர்த்தஸ்வஜன பாந்தவான் ।*
*ஆத்ம தாராதிகம் ஸர்வம் ஸத்குருப்யோ நிவேதயேத் ॥ 52 ॥*

52. ஒருவன் தன்னை முழுவதுமாக குருவினிடம் சமர்ப்பித்துவிட வேண்டும். உடல், புலன்கள், பிராணன், செல்வம், உற்றார், தான், தன் மனைவி இவை அனைத்தும் குருவிடம் அர்ப்பிக்கப்படல் வேண்டும்.

குறிப்புகள் : எவ்வித நிபந்தனையுமின்றி சீடன் குருவை சரணடைய வேண்டும். சீடன் மட்டுமல்லாது, இங்கே குறிப்பிடப்பட்டுள்ள அனைத்துமே குருவிடம் சமர்ப்பிக்கப்பட வேண்டியவை ஆகும்.

*குருரேகோ ஜகத்ஸர்வம் பிரம்மவிஷ்ணுசிவாத்மகம் ।*
*குரோ பரதரம் நாஸ்தி தஸ்மாத்ஸம்பூஜயேத்குரும் ॥ 53 ॥*

53. பிரம்மா, விஷ்ணு, சிவன் அடங்கிய அனைத்துப் படைப்புமே குருவின் சொரூபம்தான். குருவை விட மேலானது எதுவுமில்லை. எனவே ஒருவன் தனது குருவை வணங்க வேண்டும்.

குறிப்புகள் : ''எல்லாம் பிரம்மமயம் - இரண்டாவது எதுவும் கிடையாது - *ஸர்வம் பிரம்மமயம் ஜகத் நேஹ நாநாஸ்தி கிஞ்சன்*'' என்று உணரும் வேதாந்தியின் பிரம்மாகார விருத்திக்கு நிகரானது இது.

''*த்ருஷ்டிம் ஞானமயீம் க்ருத்வா பச்யேத் பிரம்ம மயம் ஜகத்*' - பார்வையை ஞானமயமாகச் செய்து ஒருவன் எங்கும் பிரம்மத்தையே காணவேண்டும்'', என்று உபநிஷதம் கூறுகிறது. இதுபோலவே குருபாவனையுடன் கூடியவனாக ஒருவன் 'எல்லாம் குருமயமே'' என்று உணர வேண்டும்.

**ஸர்வச்ருதிசிரோ ரத்ன விராஜிதபதாம்புஜம் |**
**வேதாந்தார்த்தப்ரவக்தாரம் தஸ்மாத் ஸம்பூஜயேத்குரும் || 54 ||**

54. குருவினுடைய இரு பாதகமலங்களும் எல்லா சுருதிகளின் இரண்டு முத்துக்களைப் போலப் பிரகாசிக்கின்றன. வேதாந்த உண்மைகளின் வித்தகரே குரு. எனவே ஒருவன் குருவை வணங்க வேண்டும்.

குறிப்புகள் : துளசிதாஸரின் ஸ்ரீராமசரிதமானஸில் இதுபோன்றதொரு கருத்து காணப்படுகிறது. அதில் அவர் குருவின் பாதங்கள் விரல் நகம் போல் ஜொலிக்கும் முத்துக்களால் அலங்கரிக்கப்பட்டதாக விவரிக்கிறார். இந்த முத்துக்களிலிருந்து ஒளிரும் வெளிச்சத்தில் எவர் தியானிக்கிறாரோ அவர் தெய்வீகப் பார்வையை அடைகிறார் என மேலும் அவர் கூறுகிறார்.

அந்தச் செய்யுள் கீழ்வருமாறு:

**ஸ்ரீகுருபத நக மணி கணஜ்யோதி**

**ஸுமிரத திவ்ய திருஷ்டி ஹிய ஹோதி ||**

***யஸ்ய ஸ்மரண மாத்ரேண ஞானமுத்பத்யதே ஸ்வயம் |***

***ஸ ஏவ ஸர்வ ஸம்பத்தி : தஸ்மாத் ஸம்பூஜயேத் குரும்***

***|| 55 ||***

55. எவரை நினைத்தமாத்திரத்திலேயே ஒருவரிடம் தானாகவே ஆத்மஞானம் உதயமாகிறதோ அந்த குருவே ஒருவரது அனைத்து செல்வமாகும். எனவே சாதகன் எப்பொழுதும் தனது குருவை வழிபட வேண்டும்.

குறிப்புகள்: ஆன்மீக மார்க்கத்தில் சீடனுக்கு அவரது குருவின் வாழ்க்கை எப்பொழுதும் உற்சாகமூட்டுவதாகும். மாயையை எதிர்த்துப் போராட வேண்டிய ஆற்றலை அவன் பெறுகிறான். குருவின் இலட்சியங்களைத் தனக்கு வழிகாட்டியாக சீடன் கொள்கிறான். தனது குருவின் வாழ்க்கையின் பல நிகழ்ச்சிகளை சீடன் நினைவு கூர்ந்து, அவற்றிலிருந்து அவன் உத்வேகம் பெறுகிறான். எனவே சீடனின் உண்மையான செல்வம் குருவேயாகும். அதனால்தான் இந்த சுலோகங்களில் குரு சேவைக்கு இவ்வளவு முக்கியத்துவம் தரப்பட்டிருக்கிறது.

''*யஸ்ய ஸ்மரணமாத்ரேண*'' என்பதற்குப் பதில் ''*யஸ்ய ச்ரவண மாத்ரேண*'' என்னும் இந்த சுலோகம் தொடங்குவதாகச் சொல்லப்படுகிறது. ''குருவின் போதனைகளைக் கேட்டு சீடன் ஞானத்தை அடைகிறான்'' என்பது அதன் பொருளாகும். இந்த இடத்தில் ''சிரவணம்'' என்பது குருவிடமிருந்து பிரம்ம ஞானத்தைப் பற்றிய உண்மைகளைச் செவிமடுத்தல் எனப் பொருள்படும்.

***க்ருமி கோடிபிராவிஷ்டம் துர்கந்தகுல தூஷிதம் |***

***அநித்யம் துக்க நிலயம் தேஹம் வித்தி வரனனே || 56 ||***

56. ஓ பார்வதி! அநேக கிருமிகளைக் கொண்டதும், நாற்றம் பொருந்தியதும், ரத்தம், மலம், சிறுநீர் போன்றவை நிறைந்ததும், துன்பம் நிறைந்ததும், அழியக் கூடியதுமானது இந்த உடல் என்பதை, ஓ பார்வதி! நீ அறிந்து கொள்வாயாக.

இந்த சுலோகத்தின் இரண்டாவது அடி கீழ்க் கண்டவாறும் கூறப்படுகிறது: ''*சிலேஷ்ம - ரக்த - த்வச மாம்ஸைர் நத்தம் சைதத்வரானனே*'' சுலோகத்தின் பொருளில் இதனால் எந்தவித மாற்றமும் இல்லை.

சாதகனின் மனதில் வைராக்கியத்தை ஏற்படுத்த வேண்டும் என்பதற்காகவே உடலின் உள்ளே உள்ள பொருள்கள் இங்கே எடுத்துரைக்கப்படுகின்றன. பார்வதிக்கு சிவன் சொன்னாலும், இந்த அறிவுரை சீடர்களுக்குத்தான் உரியது. ''ஏ மனிதனே! நீ சோப், சென்ட், சில்க், நகைகள் போன்றவற்றால் பலவிதத்தில் அலங்கரிக்கும் உனது உடலின் உண்மையான நிலையை நினைந்து பார்!'' என்று அவர் சொல்கிறார். சம்சாரத்தில் சிக்குண்டிருக்கும் ஜீவர்களை மயக்குவதற்கு மாயை விரிக்கும் தூண்டுதல்களே அவை. விவேகம் வைராக்கியம் பொருந்தின மனிதன் அவற்றிற்கு இரையாவதில்லை.

**ஸம்ஸார வ்ருக்ஷமாரூடா: பதந்தி நரகார்ணவே ।**
**யஸ்தானுத்தரதே ஸர்வான் தஸ்மை ஸ்ரீகுரவே நம: ॥57॥**

57. ஸம்ஸார மரத்தில் ஏறியவர்கள் நரகக் கடலில் விழுகிறார்கள். இத்தகைய அனைவரையும் காப்பாற்றும் குருவிற்கு நமஸ்காரம்.

குறிப்புகள் : நரகக் கடலினருகில்தான் ஸம்ஸார மரமும் வளர்கிறது. தங்குவதற்கும், போகத்தின் பலன்களை அனுபவிப்பதற்காகவும் இந்த ஸம்ஸார மரத்தில் ஏறும்

ஜீவர்கள் சீக்கிரத்திலேயே சோர்ந்துபோய் ஆதரவற்றவர்களாக ஆகி நரகக் கடலில் விழுகிறார்கள். உதவியும் ஆதரவும் அற்றவர்களது நிலைமை இது. ஆனால் சத்குருவினால் பாதுகாக்கப்பட்ட ஜனங்கள் விவேகம், வைராக்யம் என்ற இறக்கைகளுடன் மோக்ஷத்திற்குப் பறந்து சென்று விடுகிறார்கள். அவர்கள் நரக தூதர்களிடம் அகப்படாது தப்பித்து விடுகிறார்கள்.

**குருர் பிரம்மா குருர் விஷ்ணு குருர்தேவோ மஹேஸ்வர :।**
**குருரேவ பரப்பிரம்ம தஸ்மை ஸ்ரீகுரவே நம: ॥ 58 ॥**

58. குருவே பிரம்மா. குருவே விஷ்ணு. குருவே மஹேஸ்வரன். குருவே பரப்பிரம்மன். இத்தகைய குருவிற்கு வணக்கம்.

குறிப்புகள்: இரண்டாவது அடியின் முதற்பகுதி '*குருரேவ பரப்பிரம்மம்*' என்பதற்குப் பதிலாக '*குருஸ்ஸாக்ஷாத் பரப் பிரம்ம*' என்று பரவலாக வாசிக்கப்படுகிறது. கட்புலனாகும் மேலான தத்துவம் குருவேயாவார்.

பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரும் ஒருமித்தவரே குரு. அவர்களைக் கடந்த பிரம்மமும் குருவே. குருவும் பிரம்மமும் ஒன்றே என்பதை இந்த சுலோகம் வலியுறுத்துகிறது.

உலகின் பல பாகங்களைக் காணாத மாணவன் ஒருவனுக்கு ஆசிரியர் பூமி உருண்டையைக் கொண்டு வருகிறார். அதில் பல்வேறு நாடுகள் பல கோடுகளாலும், நிறங்களாலும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அதைப் போலவே பிரம்ம ஞானம் கைவரப் பெறாத சீடனுக்கு குருவின் திரு உருவே பிரம்ம சொரூபம் என்று வேதங்கள் மொழிகின்றன. பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரும்

குருவிடம் ஏற்றிக் கூறப்படுகின்றனர். ஏணியின் துணை கொண்டு மரத்தின் மேல் கிளைக்குப் போகும் ஒருவனது முயற்சியுடன் இந்த சாதனை முறை ஒப்பிடப்படுகிறது. விக்கிரக வழிபாட்டில் விக்கிரகம் அப்படியே விக்கிரமாயிருக்க வழிபாடு இறைவனைச் சென்றடைவது போல, குருவின் துணையுடன் சீடன் பிரம்மத்தை அடைகிறான். குருவைப் பொறுத்தமட்டில் இத்தகைய வழிபாட்டின் பலனை நீங்கள் பார்க்க முடியாவிட்டாலும், வழிபாடு குருவால் உணர்த்தப்படும் பிரம்மத்தை அடைகிறது.

**அக்ஞானதிமிராந்தஸ்ய ஞானாஞ்ஜனசலாகயா |**
**சக்ஷுருன்மீலிதம் யேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 59 ||**

59. அக்ஞானம் எனும் திரையினால் மறைக்கப்பட்டு பார்வையிழந்த ஒருவனுக்கு ஞானம் எனும் கண் மையினால் பார்வை அளித்து மேலான பிரம்ம நிலையை அடைய வகை செய்யும் குருவை நான் வணங்குகிறேன்.

குறிப்புகள் : 'காடராக்ட்' என்னும் விழித்திரை மறைப்பை டாக்டர் அறுவைச் சிகிச்சையால் நீக்கியதும் நோயாளி பொருள்களை நன்கு பார்க்க முடிகிறது. இருள் கவிந்திருந்த இடத்தில் இப்பொழுது நல்ல ஒளி இருக்கிறது. இதைப் போலவே ஆசிரியர் ஞானம் எனும் கண்மையைத் தடவியதும், சீடன் மேலான பார்வையைப் பெற்று பொருள்களை உள்ளபடி பார்க்கிறான்.

**அகண்ட மண்டலாகாரம் வ்யாப்தம் யேன சராசரம் |**
**தத்பதம் தர்சிதம் யேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 60 ||**

60. அசையும் மற்றும் அசையாப் பொருள்கள் யாவற்றையும் ஊடுருவி நிற்கும், உணர்வால் பிரபஞ்சம்

முழுவதையும் வியாபித்து நிற்பவரும், 'தத்பதம்' எனும் பேருணர்வுப் பெருநிலையை எனக்கு அருளியவருமான சத்குருவை நான் வணங்குகிறேன்.

குறிப்புகள் : இந்த சுலோகத்தினால் பரந்து விரிந்த பல்வேறு உலகங்கள் (மண்டலங்கள்) குறிப்பிடப் படுகின்றன. சூரிய மண்டலம், நட்சத்திர மண்டலம் போன்ற பல்வேறு மண்டலங்கள் அனைத்தும் பிரம்மனால் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. இவை அனைத்தையும் குரு சீடனுக்கு உணர்த்துவதால், அவர் அனைவரிலும் மேலானவராகக் கருதப்படுகிறார்.

**ஸ்தாவரம் ஜங்கமம் வ்யாப்தம் யத்கிஞ்சித்ஸசராசரம் |**
**த்வம்பதம் தர்சிதம் யேன தஸ்மை ஶ்ரீ குரவே நம: || 61 ||**

61. அசையும் மற்றும் அசையாப் பொருள்கள் தவிர உயிருள்ள மற்றும் உயிரற்ற பொருள்கள் அனைத்தையும், (*தத் த்வம் அஸி* மகாவாக்கியத்தில்) *'த்வம்பதம்'* என்பதன் உட்பொருளையும் உணர்த்தும் குருவிற்கு நமஸ்காரம்.

**சின்மயம் வ்யாபிதம் ஸர்வம் த்ரைலோக்யம் ஸசராசரம் |**
**அஸித்வம் தர்சிதம்யேன தஸ்மை ஶ்ரீகுரவே நம: || 62 ||**

62. (*தத் த்வம் அஸி* என்ற மஹா வாக்கியத்தில் *'அஸி* பதத்திற்கு விளக்கமாக) சின் மயமாய் அசையும் மற்றும் அசையாப் பொருள்கள் யாவற்றிலும் மூவுலகிலும் வியாபித்து நிற்கும் அந்த குருவிற்கு என் வணக்கம்.

குறிப்புகள் : 60, 61, 62 ஆகிய சுலோகங்கள் நான்கு மகாவாக்கியங்களை சீடனுக்கு விளக்கி *'தத் த்வம் அஸி* - அதுவே நீயாக இருக்கிறாய்' என்பதன் மூலம் அவனே பிரம்மன் என்பதை விளக்குபவர் குருவே என்பதைக் குறிக்கின்றன. இந்த அறிவின் மூலம் சீடனைக் கவ்வி

நிற்கும் அக்ஞானத் திரை அகற்றப்படுகிறது. அறியாமை நீங்குகையில் ஆத்மன் உணரப்படுகிறது.

**நிமிஷான் நிமிஷார்தாத்வா யத்வாக்யாத்வை விமுச்யதே |**
**ஸ்வாத்மானம் சிவமாலோக்ய தஸ்மை ஸ்ரீகுரவே நம:**
**|| 63 ||**

63. தன்னையே 'சிவம்' என உணர்ந்து குருவின் வார்த்தைகளைக் கடைப்பிடித்ததால் ஒருவினாடி அல்லது அரை வினாடியில் மாயையின் பிடியிலிருந்து எவன் தன்னை விடுவித்துக் கொள்கிறானோ, அத்தகைய குருவிற்கு நமஸ்காரம்.

**சைதன்யம் சாச்வதம் சாந்தம் வ்யோமாதீதம் நிரஞ்சனம் |**
**நாதபிந்து கலாதீதம் தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 64 ||**

64. அறிவு சொரூபமானவரும், ஒளிமயமானவரும், பற்றற்று அமைதியாக யாண்டும் திகழ்பவரும், நாத, பிந்து, கலைகளைக் கடந்து ஆகாசத்திற்கும் அப்பால் விளங்குபவருமாகிய குருவிற்கு நமஸ்காரம்.

குறிப்புகள்: ஆகாயத்தைக் கடந்தவர் என்பது நிலம், நீர், தீ, காற்று, வெளி ஆகிய பஞ்ச பூதங்களையும் அவர் கடந்தவர் என்று பொருள்படுகிறது. அனைத்து பூதங்களையும் ஈண்டு ஆகாசம் குறிக்கிறது.

நாதம், பிந்து, கலை ஆகியவை இப்பிரபஞ்சம் தோன்றுவதற்கு முன்னர் இருந்த நிலைகள். இவை அனைத்தையும் கடந்தவர் குரு என்பது இங்கு குறிப்பு. குரு கிருபையால் பல்வேறு நிலைகளை சீடன் கடந்து அமைதி ஆனந்தத்தை அனுபவிக்க வல்லவனாகிறான்.

'*நிர்மலம் தர்சிதம் யேன*' என்பது சுலோகத்தின் இரண்டாவது அடியின் பிறிதொரு முறையாகும்.

**நிர்குணம் நிர்மலம் சாந்தம் ஜங்கமம் ஸ்திரமேவ ச |**
**வ்யாப்தம் யேன ஜகத்ஸர்வம் தஸ்மை ஸ்ரீ குரவே நம : || 65 ||**

65. குணம் கடந்து, நிர்மலமாகவும், சாந்தமாகவும், அசையும் மற்றும் அசையாப் பொருளாகவும் விளங்கும் எவரால் அகில உலகம் முழுவதும் வியாபிக்கப்பட்டிருக்கிறதோ அந்த ஸத்குருவை நான் வணங்குகிறேன்.

**ஸ பிதா ஸ ச மே மாதா ஸ பந்து: ஸ ச தேவதா |**
**ஸம்ஸார மோஹ நாசாய தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 66 ||**

66. அவரே தந்தை. அவரே தாய். அவரே உற்றார். ஸம்ஸாரமாகிய மோகத்தை அகற்றி எங்களை விடுவிப்பதற்குரிய கடவுளும் அவரே. அவருக்கு நமஸ்காரம்.

**யத்ஸத்வேன ஜகத்ஸத்யம் யத்ப்ரகாசேன பாதியத் |**
**யதானந்தேன நந்தந்தி தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 67 ||**

67. எவரது மகிமையால் இவ்வுலகம் உண்மையாகத் தோன்றுகிறதோ, எவரது பிரகாசத்தால் இவ்வுலகம் ஒளிர்கிறதோ, எவரது ஆனந்தத்தால் அனைவரும் இங்கு ஆனந்தமாக இருக்கிறார்களோ, அந்த குருவிற்கு எனது வணக்கம்.

**யஸ்மின் ஸ்திதமிதம் ஸர்வம் பாதி யத்பானரூபத : |**
**ப்ரியம் புத்ராதி யத்ப்ரீத்யா தஸ்மை ஸ்ரீகுரவே நம : || 68 ||**

68. எதில் இப்பிரபஞ்சம் யாவும் இருக்கிறதோ, இங்கு எதன் ஒளியால் அனைத்தும் ஒளிர்கிறதோ, எவரது அன்பினாலும் மகிழ்ச்சியினாலும் மகன் போன்றோர்

நம்மிடம் அன்பாயிருக்கிறார்களோ அந்த குருவிற்கு என் வணக்கம்.

குறிப்புகள் : இவ்வுலகில் ஏனைய எல்லாம் எந்த சத்சிதானந்த தத்துவத்தில் மகிழ்ச்சியாயுள்ளனவோ, அந்த தத்துவம் உண்மையில் குருவேயாகும்.

**யேனேதம் தர்சிதம் தத்வம் சித்த சைத்யாதிகம் ததா ।**
**ஜாக்ரத்ஸ்வப்னஸுஷுப்த்யாதி தஸ்மை ஸ்ரீகுரவே நம: ॥ 69 ॥**

69. எவரது சக்தியால் நாம் இங்கு அனைத்தையும் காண்கின்றோமோ, எவரது ஆற்றலால் மனம், புத்தி, சித்தம் போன்றவை செயல்படுகின்றனவோ, எவரது அறிவால் ஜாக்ரத், சொப்ன, ஸுஷுப்தி நிலைகள் உணரப்படுகின்றனவோ அந்த குருவிற்கு வணக்கம்.

**யஸ்ய ஞானமிதம் விஸ்வம் நத்ருச்யம் பின்னபேதத :।**
**ஸதைக ரூபரூபாய தஸ்மை ஸ்ரீகுரவே நம: ॥ 70 ॥**

70. எவரது ஞானம் இந்தப் பிரபஞ்சமோ, எவரது பார்வையில் காண்போன், காணப்படுபொருள் என்ற பேதம் இல்லையோ, ஒருமை உணர்வில் யார் யாண்டும் நிலைத்திருக்கிறாரோ அந்த குருவிற்கு எனது வணக்கம்.

குறிப்புகள்: இந்தப் பிரபஞ்சத்தில் அவருக்குத் தெரியாதது எதுவும் இல்லை. ஆனால் அவருக்கோ காண்பது, காணப்படுவது என்ற எவ்வித பேதமும் கிடையாது. அவர் எப்பொழுதும் ஒன்றையே காண்கிறார். தனது சொரூபத்தில் அவர் யாண்டும் திளைத்திருக்கிறார். இவ்வுலகில் வாழ்வதற்கிடையில் அவர் எதனாலும் பாதிக்கப்படுவதில்லை.

**யஸ்ய ஞாதம் மதம் தஸ்ய மதம் யஸ்ய ந வேத ஸ :।**
**அனன்யபாவபாவாய தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥ 71 ॥**

71. பிரம்மனை எவராலும் அறிந்து கொள்ள முடியாது அல்லது பிரம்மன் எவராலும் அறியப்பட முடியாதது என்பதை எவர் உணர்ந்திருக்கிறாரோ அவரால் தான் பிரம்மன் உண்மையில் உணரப்படுகிறது. ஆனால் எவராவது பிரம்மத்தைத் தான் அறிந்துவிட்டோம் என எண்ணினால் உண்மையிலேயே அதைப் பற்றி அவருக்கு ஒன்றுமே தெரியாது. எனவே எவர் யாண்டும் ஆத்மஞானத்தில் நிலை பெற்றிருக்கிறாரோ அந்த குருவிற்கு என் வணக்கம்.

'*யஸ்ய அமத்*' என்ற கேன உபநிஷத மந்திரத்தின் மாற்றுருவமே இந்த சுலோகம்.

குறிப்புகள்: சுலோகத்தின் முதல் பாதி ஆத்மஞானத்தைக் குறிக்கிறது. ஆனால் குரு யாண்டும் ஆத்மனுடன் ஒன்றிய நிலையில் நிலை பெற்றிருக்கிறார். எனவே குருவை சீடன் வணங்குகிறான். மேற்கானும் சுலோகத்தின் மற்றொரு வடிவம் கீழே தரப்படுகிறது.

*யதக் ஞானான் மதம் பூயாத் ந மதம் யஸ்ய வேதனாத் |*
*தத் பிரம்ம தர்சிதம் யேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: ||*

கேன உபநிஷதத்தில் பிரம்மனைப் பற்றிக் குறிப்பிடும் ஒரு முக்கிய மந்திரம் கீழ்வருமாறு:

**யஸ்யாம தஸ்ய மதம் மதம் யஸ்ய நவேத ஸ:|**
**அவிக்ஞாதம் விஜானாதம் விக்ஞாதம் அவிஜானதாம் ||**

இரண்டு சுலோகங்களின் கருத்தும் ஒன்றுதான். பிரம்மனைப் பற்றி யார் தனக்குத் தெரியும் என்கிறானோ அவனுக்கு ஒன்றும் தெரியாது. யார் தெரியாது என்கிறார்களோ அவர்களுக்குத் தெரியும். ஏனெனில் பிரம்மன் ஒரு அறியப்படும் பொருளல்ல. அது யாண்டும் அறியும் ஆன்மாவே. ஆத்மஞானத்தில் முரண்பாடு

போலத் தெரிவது இதுதான். தெரிந்ததையும் தெரியா ததையும் அறிந்தவர் குரு. எனவே அவர் அனைவரிலும் மேலானவர், வணங்கப்படத்தக்கவர். நான் அல்லது அஹம் அல்லது ஆத்மா, சித் அல்லது ஆன்ம ஸ்வரூபமாகவே பிரம்மன் உணரப்பட வேண்டும், மற்றும் அனாத்மா அல்லது இதம் என்னும் ஜ்ஞேயமான பொருளாக அல்ல.

**யஸ்மை காரணரூபாய கார்யரூபேண பாதி யத் ।**
**கார்ய காரணரூபாய தஸ்மை ஸ்ரீகுரவே நம : ॥ 72 ॥**

72. அனைத்தினுடைய காரணம் எவரோ ஆனால் யார் உலகிற்கு காரியம் போலத் தோற்றுகிறாரோ, அந்தக் காரண-காரியம் போலத் தோற்றுகிறாரோ, அந்தக் காரண-காரியம் இரண்டினுடைய ரூபமாகத் திகழும் குருவிற்கு வணக்கம்.

குறிப்புகள்: அனைத்தினுடைய காரணமாக இருக்கும் பிரம்மன் காரியம் அல்லது விளைவான உலகமாகவும் தோன்றுகிறது.

**நானாரூபமிதம் விஸ்வம் ந கேனாப்யஸ்தி பின்னதா ।**
**கார்ய காரணரூபாய தஸ்மை ஸ்ரீகுரவே நம: ॥ 73 ॥**

73. பல்வேறு வடிவங்களைக் கொண்ட இவ்வுலகம் எவரிடம் பன்மையுடன் தோன்றவில்லையோ, எவர் அனைத்தினுடையவும் காரண, காரியமாகவும் திகழ்கிறாரோ அந்த குருவை நான் வணங்குகிறேன்.

குறிப்புகள்: ஆத்மன் உணரப்படும் பொழுது பன்மை மறைந்து விடுகிறது. ஆன்மஞானத்தை உடைய ஞானி எங்கும் வேற்றுமையைக் காண்பதில்லை. புகழ் பெற்ற ஞானி சதாசிவப் பிரம்மத்தைப் போல, *'ஸர்வம் பிரம்மமயம் ரே ரே ஸர்வம் பிரம்ம மயம்* - 'ஏ மனிதா

அனைத்தும் பிரம்மமயம்' - என்று அவர் உணரவும் பார்க்கவும் செய்கிறார். ''இதுவரை பன்மையாகத் தோன்றிய உலகம் இப்பொழுது எங்கே மறைந்து போயிற்று?', என்று ஆன்மஞானம் கைவரப்பெற்ற ஞானி கேட்கிறார்.

**ஞானசக்தி ஸமாரூட தத்வமாலா விபூஷிணே /**

**புக்திமுக்திப்ரதாத்ரேச தஸ்மை ஸ்ரீகுரவே நம // 74 //**

74. ஞானமும் சக்தியும் வாய்க்கப் பெற்றவர் எவரோ, உண்மைப் பொருளாகிய மாலையை ஆபரணமாகக் கொண்டவர் எவரோ, இவ்வுலகில் இன்பத்தையும் மோக்ஷத்தையும் அளிப்பவர் எவரோ அந்த குருவிற்கு வணக்கம்.

குறிப்புகள்: ஆன்மஞானியான துறவி சகல சித்தி களையும் ரித்திகளையும் பெற்று விளங்குகிறார். அவை அவரது காலடியில் சுழல்கின்றன. அவற்றைப் பற்றி அவருக்கு எதுவுமே தெரியாமலிருக்கலாம். அவர் அவற்றை வெளியே காண்பிக்காமலிருக்கலாம். சீடன் விரும்பும் அனைத்தையும் அவர் அளிக்க முடியும். குருவிடம் தங்களது பக்தி, சிரத்தை மற்றும் தங்கள் சாதனையின் மூலம் சீடர்கள் இந்த சித்திகளையும் ஆற்றல்களையும் பெறுகிறார்கள்.

**அநேக ஜன்ம ஸம்ப்ராப்த கர்மபந்த விதாஹினே /**

**ஞானானலப்ரபாவேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: // 75 //**

75. எண்ணற்ற பிறவிகளில் பெறப்பட்ட கர்ம முடிச்சுகளை ஞான சக்தியால் இல்லாதாக்கும் அந்த குருவிற்கு வணக்கம்.

குறிப்புகள்: தமது தவத் தீயின் ஆற்றலால் குரு சீடனின் அனைத்து கர்மத்தையும் எரித்துவிடுகிறார்.

''ஞானாக்னிஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே அர்ஜுன்''. ஓ அர்ஜுனா! ஞானத்தீ கர்மங்கள் அனைத்தையும் எரித்து விடுகிறது' என்று கீதை கூறுகிறது. உண்மையில் கர்மமுடிச்சுகள் சாம்பலாகின்றன. இதுதான் உண்மையான பொருள்.

**சோஷணம் பவஸிந்தோஸ் ச தீபனம் க்ஷரஸம்பதாம் ।**
**குரோ: பாதோதகம் யஸ்ய தஸ்மை ஸ்ரீகுரவே நம: ॥ 76 ॥**

76. எவருடைய சரணாமிருதம் சம்சாரமாகிய சமுத்திரத்தை வற்றவைத்து வாழ்வில் ஒருவனது நிலைமையை ஒளிமயமாக்க வல்லதோ அந்த ஸத்குருவை நான் வணங்குகின்றேன்.

குறிப்புகள் : 'தீபனம் க்ஷரஸம்பதாம்' என்பது சீடனின் செல்வம், சொத்து மற்றும் லௌகிக ரீதியிலான அனைத்து வளத்தையும் குரு அருள் மேம்பாடுஅடையச் செய்கிறது எனப் பொருள்படுகிறது.

உலகில் தீயானது மரம், காகிதம், துணி போன்ற சாம்பலாகும் பொருள்களை எரிக்கவல்லது என்பதை அறிவோம். தண்ணீர் நனைக்கிறது. ஆனால் குரு கிருபையின் பெருமை என்னவெனில் குருவின் திருப்பாதங்களைக் கழுவிய நீரானது சம்ஸாரமாகிய கடலின் நீரை வற்றவைக்கும் ஆற்றல் வாய்ந்ததாக விளங்குகிறது. வேறு எங்கும் தண்ணீர் தண்ணீரை வற்றவைக்கும் தன்மையைப் பற்றிக் கேள்விப்பட முடியாது. அது பொருள்களை நனைக்கும் அல்லது நீர்த்தேக்கத்தில் ஏற்கனவே இருக்கும் நீரின் அளவைக் கூட்டும்.

**ந குரோரதிகம் தத்வம் ந குரோரதிகம் தப :।**
**ந குரோரதிகம் ஞானம் தஸ்மை ஸ்ரீகுரவே நம: ॥ 77 ॥**

77. குருவைவிடச் சிறந்த தத்துவம் கிடையாது. குருவைவிடச் சிறந்த தவம் இல்லை. குருவை விடச் சிறந்த ஞானம் கிடையாது. எனவே அந்த குருவை நான் வணங்குகிறேன்.

*மன்னாத: ஸ்ரீஜகன்னாதோ மத்குரு: ஸ்ரீஜகத்குரு: |*
*மமாத்மா ஸர்வபூதாத்மா தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 78 ||*

78. என் தெய்வம் ஸ்ரீஜகன்னாதர்; என்குரு ஜகத் குரு ஆவார்; எனது ஆன்மா எல்லா உயிர்களிலும் இயங்கும் ஆன்மாவாகும் - எனவே நான் ஸத்குருவை வணங்குகிறேன்.

குறிப்புகள்: அனைத்திலும் உள்ள ஆன்மாவே ஒருவனிடம் உள்ளது என்ற அறிவு குருவின் கருணையால் பெறப்படுகிறது. குருவிடம் சீடனது பக்தி அதிகரித்து அனன்ய பிரேமையாக மாறுகையில் அவனால் இந்த நிலை அடையப்படுகிறது.

*குருராதிரனாதிஸ்ச குரு: பரமதைவதம் |*
*குரு மந்த்ர ஸமோ நாஸ்தி தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 79 ||*

79. குருவே அனைத்திற்கும் காரணம். அவர் தொடக்க மற்றவர். குருவே மேலான பரம்பொருள். மேலான தெய்வம். 'குரு' என்ற இரண்டெழுத்துக்கு ஈடான மந்திரம் கிடையாது. அத்தகைய குருவிற்கு வணக்கம்.

குறிப்புகள்: குரு கீதையில் 151 வது சுலோகத்தைப் பார்க்கவும். குருவினால் தீட்சை அளிக்கப்பட்ட மந்திரத்திற்கு சமமானது வேறு கிடையாது என்ற நம்பிக்கை மந்திர சித்திக்கும் பெருநிலை அடைவதற்கும் மிகவும் இன்றியமையாதது. நம்பிக்கையே பூரண வெற்றிக்கு அடிப்படை. நம்பிக்கை இன்மை தோல்விக்குக் காரணம். அவர் ஆதியில்லாதவர், முடிவு இல்லாதவர்,

அனைத்து உலகத் தொல்லைகளும் அவரிடம் முடிவடைகின்றன. *ஓமித்யேகாக்ஷரம் பிரம்ம - த்வயக்ஷர குருருச்யதே* |

**ஏக ஏவபரோ பந்துர்விஷமே ஸமுபஸ்திதே |**
**குரு: ஸகலதர்மாத்மா தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 80 ||**

80. ஒருவன் பாதகமான சூழ்நிலைக்கு உட்படுகையில் இவ்வுலகில் அவனுக்கு உள்ள ஒரே மேலான உதவி, உற்றார், நண்பர், ஸகல தர்ம சொரூபியான குருவேயாவார். அவருக்கு வணக்கம்.

குறிப்புகள் : '*தர்மாத்மர்*' என்பது தர்மத்தை அறிந்தவர், அதைப் பின்பற்றுபவர் என்று பொருள்படுகிறது. தர்மத்தின் உண்மையான விளக்கத்தை குரு அளிக்கிறார். ''*மஹாஜனோ யேன கதா ஸ பந்தா:* '' - சான்றோரால் பின்பற்றப்பட்ட பாதை அது! குருமார்கள் தாங்களே அந்தப் பாதையில் நடந்து பிறருக்கு உதாரண புருஷர்களாகத் திகழ்கின்றனர். அதிவர்ணாச்ரமிகள், யோகிகள் மற்றும் ஜீவன் முக்தர்களது வழிமுறைகள் சாதாரண மனிதர்களால் புரிந்து கொள்ள முடியாதவையாகும்.

**குருமத்யே ஸ்திதம் விச்வம் விச்வமத்யே ஸ்திதோ குரு: |**
**குருர் விச்வம் ந சான்யோஸ்தி தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 81 ||**

81. இப் பிரபஞ்சம் குருவில் உள்ளது. குரு இப்பிரபஞ்சத்தின் மத்தியில் உள்ளார். இந்தப் பிரபஞ்சமே குருதான், வேறு அல்ல. எனவே அந்த குருவிற்கு வணக்கம்.

குறிப்புகள் : முதல் தர சிஷ்யன் உலகத்தையே குருவாகக் கொள்கிறான். அவன் தன் குருவை எங்கும் காண்கிறான்.

*பவாரண்யப்ரவிஷ்டஸ்ய திங்மோஹப்ராந்த சேதஸ: I*
*யேன ஸந்தர்சித: பந்தா: தஸ்மை ஸ்ரீ குரவே நம: II 82 II*

82. பிறப்பு எனும் காட்டில் திசை தெரியாது தத்தளிக்கும் ஒருவனுக்கு சரியான திசையைக் காண்பிக்கும் அந்த குருவிற்கு வணக்கம்.

குறிப்புகள் : பிறந்து உழலும் ஜன்மமானது ஒரு கானகத்துடன் ஒப்பிடப்படுகிறது. அடர்ந்த காட்டினுள் நுழையும் ஒருவன் வழி தெரியாது திக்குமுக்காடுவான். சூரியன் தெரியாத சமயம் அவனுக்குத் திசைகளைக் கூட அறிந்து கொள்ள முடியாது. காட்டில் பல்வேறு திசைகளையும் நன்கு அறிந்த ஒருவனால் எவ்விதம் அந்த வழி தவறிய வழிப்போக்கனுக்கு சரியான திசையைக் காட்டி அடைக்கலமும் ஆதரவும் அளிக்க முடியுமோ அதைப்போல இந்த ஸம்ஸாரமெனும் காட்டில் உலகாயத மனிதனைக் காக்கவல்லவர் குரு ஒருவரே. குரு இன்றி இந்தக் காட்டினில் வழி தவறிய ஒருவன் அங்குமிங்கும் அலைந்து சோர்ந்து போகிறான். அதைப்போலவே ஆன்மீகப் பாதையில் குரு இல்லாத ஒருவன் குறிக்கோளின்றி அங்குமிங்கும் அலைந்து பிறப்பு, இறப்பு, வியாதி, குடும்பத்தொல்லை, வறுமை போன்ற ஸம்ஸார சிக்கல்களில் மாட்டிக்கொண்டு தவிக்கிறான்.

*தாபத்ரயாக்னி தப்தானா மசாந்தப்ராணினாம் பு வி I*
*யஸ்ய பாதோதகம் கங்கா தஸ்மை ஸ்ரீ குரவே நம : II 83 II*

83. மூவகை அக்னியினால் துன்புற்றவர்களாக உலகில் ஓய்வற்ற உயிர்கள் குறிக்கோளிலிலாது அலைந்து திரிகின்றன. இத்தகைய மக்களுக்கு குருவின் சரணாம்ருதம் உண்மையிலேயே கங்கைக்கு நிகர். அந்த குருவிற்கு வணக்கம்.

குறிப்புகள் : இவ்வுலகில் மனிதன் அத்யாத்மிகம், அதிபௌதிகம், அதிதைவிகம் எனும் மூவகை தாபத்துக்கு உள்ளாகிறான். அத்யாத்மிக தாபம் உடலைப் பற்றியது. தேள், பாம்பு, நாய் போன்ற பிராணிகளால் ஏற்படும் தொல்லைகள் அதி பௌதிகதாபம் எனப்படும். வெள்ளம், இடி, மின்னல், தீ, பனி, பூகம்பம் போன்ற தெய்வாதீனத்தால் ஏற்படும் தொல்லைகள் அதிதைவிக தாபம் எனப்படும்.

*'குருரேவ பரா கங்கா'* என்பது சுலோகத்தின் இரண்டாவது அடியின் மறறொரு வாசகம், குருவே உண்மையில் மேலான கங்கை.

***அக்ஞான ஸர்ப்ப தஷ்டானாம் ப்ராணினாம் கஸ்சிகித்ஸக: |***
***ஸம்யக்ஞான மஹாமந்த்ர வேதினம் ஸத்குரும் வினா || 84 ||***

84. அறியாமை எனும் பாம்பினால் கடிக்கப்பட்ட வர்களுக்கு ஆத்மஞானம் எனும் மஹாமந்திரத்தை அறிந்த வைத்தியராகிய குருவைத் தவிர வேறு எவரும் கிடையாது.

இதே சுலோகத்தில் சில நூல்களில் வேறுவிதமாகவும் சொல்லப்படுகிறது.

***அக்ஞான ஹீன க்ரஸ்தா ப்ராணிநஸ்தான சிகித்ஸக: |***
***வித்யாஸ்வரூபோ பகவான் தஸ்மை ஸ்ரீ குரவே நம: ||***

இதனது பொருளும் அதுவேதான். இரண்டாவது அடியில் மட்டும் சிறு மாற்றம் கீழ்க்கண்டவாறு காணப்படுகிறது:

"அறிவு வடிவமாகவும், இறைசொரூபமாகவும் விளங்கும் குருவினை நான் வணங்குகிறேன்".

உலக வழக்கில் பாம்பினால் கடிக்கப்பட்ட ஒருவனை மந்திர சாஸ்திரத்தில் தேர்ச்சி பெற்ற வைத்தியர் ஒருவர்

கருடமந்திரம் சொல்லிக் குணப்படுத்துவதைக் காணலாம். நோயாளி உயிர் பிழைத்துவிடுவான். இது மந்திரத்தில் தேர்ச்சி பெற்றவரால் மட்டுமே முடியுமே தவிர, மற்றவரால் முடியாது. அதே போல சுரோத்ரியனாகவும், பிரம்மநிஷ்டனாகவும் திகழும் குரு ஒருவரால் தான் சம்சாரக் கடலினின்று ஒருவனைக் காப்பாற்ற முடியும். அவரே ஸத்குரு.

**ஹேதவே ஜகதாமேவ ஸம்ஸாரார்ணவஸேதவே ।**
**ப்ரபவே ஸர்வவித்யானாம் சம்பவே குரவே நம: ॥ 85 ॥**

85. இவ்வுலகத்தின் காரணமானவரும், ஸம்ஸார ஸாகரத்தைக் கடக்க உதவும் பாலமாக அமைபவரும், எல்லா அறிவு மற்றும் விஞ்ஞானத்தின் உற்பத்தி ஸ்தானமாகவும் விளங்கும் சம்புவான அந்த குருவிற்கு நமஸ்காரம்.

குறிப்புகள் : ஸாகரத்தில் பாலம் கட்டுவது முடியாத செயல்தான். ஆனால் ஸம்ஸார ஸாகரத்தில் குருவினால் பாலம் கட்டப்படுகிறது. குருவினால் அரியதைச் சாதிக்கமுடியும்.

**த்யானமூலம் குரோர்மூர்த்தி : பூஜாமூலம் குரோ : பதம் ।**
**மந்த்ரமூலம் குரோர்வாக்யம் முக்தி மூலம் குரோர் க்ருபா ॥ 86 ॥**

86. குருவின் திருவுருவம் தியானத்திற்கு அடிப்படை குருவின் திருப்பாதங்கள் பூஜைக்கு அடிப்படை. குருவின் அமுதமொழியே ஜபத்திற்கு அடிப்படை. குருவின் கருணையே முக்திக்கு அடிப்படை.

குறிப்புகள் : '*மோக்ஷ மூலம் குரோ : க்ருபா*' என்பது இந்த சுலோகத்தின் இறுதிப் பாகத்தின் மற்றொரு பிரபலமான வடிவம். இரண்டிற்கும் பொருள் ஒன்றுதான்.

**ஸப்தஸாகரபர்யந்தம் தீர்த்தஸ்நான பலம் து யத் ।**
**குருபாதபயோபிந்தோ : ஸஹஸ்ராம்சேன தத்பலம் ॥ 87 ॥**

87. எழுகடல்கள் வரை தீர்த்தயாத்திரை செய்த புண்ணிய ஸ்நானத்தில் எந்தப் பலன் கிட்டுமோ அது குருவின் பாதம் கழுவிய புனித நீரைப் பருகுவதால் கிட்டும் பலனின் ஆயிரத்தில் ஒரு பங்குக்கு ஈடாகாது.

குறிப்புகள் : தனது குருவிடம் ஆழ்ந்த பக்தியுள்ள ஒரு சீடன் புண்ணிய நதிகளுக்கும், சமுத்திரங்களுக்கும் தீர்த்த யாத்திரை செய்ய வேண்டிய அவசியமில்லை. இத்தகைய சமய அனுஷ்டானங்களால் அவன் அடையும் பலன் குருவின் சரணாமிருதத்தின் ஒரு துளியைப் பருகுவதால் கிட்டும். எனவே தேவையானது - முதலில் நம்பிக்கை, கடைசியிலும் நம்பிக்கையே.

**சிவே ருஷ்டே குருஸ்த்ராதா குரௌ ருஷ்டே ந கஸ்சன ।**
**லப்த்வா குலகுரும் ஸம்யக் குருமேவ ஸமாச்ரயேத் ॥ 88 ॥**

88. சிவன் சினந்தால் குரு உங்களைக் காத்தருள்வார். குரு கோபித்தால் உங்களை எவராலும் காப்பாற்ற முடியாது. எனவே குலகுருவை அடைந்து ஒருவன் அவரிடமே சரணடைய வேண்டும்.

குறிப்புகள் : ராமசரிதமானஸில் உத்தரகாண்டத்தில் (முடிவுப் பகுதியில்) சிவனிடம் பக்திகொண்டு குருவிடம் அசிரத்தையாயிருந்த ஒரு சீடனின் கதை வருகிறது. சிவன் கோவிலில் தமது வழிபாடுகளைச் செய்து கொண்டிருந்த தனது குருவை சீடன் மதிக்கவில்லை. சீடனின் இந்தச் செயல் சிவனுக்குச் சீற்றத்தை உண்டாக்கியது. அவர் சீடனைச் சாபமிட்டார். சீடன் மீது இரக்கம் கொண்ட குரு சிவனிடம் வேண்டி முறையிட்டு, சிவனது சீற்றம் வீண்போகக் கூடாது என்பதால் தண்டனையின்

அளவைக் குறைத்து சாபவிமோசனம் பெற்றுக் கொடுத்தார். குருவிடம் ஏன் மரியாதை காட்ட வேண்டும், சீடன் ஏன் அவர்பால் அவமரியாதை செய்யலாகாது என்பதை இது விளக்குகிறது.

குலகுரு என்றால் குடும்பகுரு என்று பொருள். இராமாயணத்தில் ரகுகுலத்தின் குருவாக வசிஷ்டர் விளங்கினார் எனக் காண்கிறோம். இராமபிரானுக்கும் வசிஷ்டரே குரு.

குலகுரு இருந்தால் அவரையே சரணடைந்து அவரிடமே மந்திரதீட்சை பெற வேண்டும்.

குலகுருவும் தீட்சாகுருவும் ஒருவரே. குலகுரு இருக்கும்பட்சத்தில் அவரிடமே தீட்சை பெறுதலே சிலாக்யமானது. இத்தகைய குலகுரு இல்லாதபோது தங்களுக்கு எவரிடம் நம்பிக்கையும் பக்தியும் உண்டோ அவர்களைக் குருவாக ஏற்றுக்கொள்ளலாம்.

உங்களை யார் ஊக்குவிக்கிறரோ, எவரிடம் உங்களுக்கு அயராத பக்தியும் சிரத்தையும் இருக்கிறதோ அவரே ஸத்குரு. உங்களுக்கு ஒரு குலகுரு இருந்து, அவரிடம் உங்களுக்கு பக்தியும் சிரத்தையும் இருக்குமானால் அவரை உங்கள் குருவாக நீங்கள் ஏற்கலாம். இந்தக் கருத்து 89ம் சுலோகத்தில் மேலும் தெளிவாக்கப்படுகிறது.

மதுலுப்தோ யதா ப்ருங்க: புஷ்பாத் புஷ்பாந்தரம் வ்ரஜேத் ।
ஞானலுப்தஸ்ததா சிஷ்யோ குரோர்குர்வந்தரம் வ்ரஜேத்
॥ 89 ॥

89. வண்டு ஒன்று தனது தாகம் தீரும்வரை தேனை நாடி ஒரு பூவிலிருந்து மற்றொரு பூவிற்கு எவ்வாறு செல்லுகிறதோ, அது போல சிஷ்யன் ஞானம் வேண்டி பல குருமார்களை அணுக வேண்டும்.

குறிப்புகள் : தான் பெற்ற அறிவுடன் சீடன் ஒருக்காலும் திருப்தி அடைந்துவிடக் கூடாது. அவன் எப்பொழுதும் ஞானவேட்கை கொண்டு விளங்க வேண்டும். முக்திக்கான சாதனை முறையைக்காட்டும் தீக்ஷா குருவின் போதனைகளை ஒருபோதும் அவன் விட்டுவிடுதல் கூடாது. குருவிற்கும் சிஷ்யனுக்கும் இடையில் உள்ள உறவு மிகவும் புனிதமானது. தீக்ஷா குருவையோ அல்லது அவர் அளித்த மந்திரத்தையோ ஒருபொழுதும் விட்டு விடுதல் கூடாது.

"குரு எனக்குச் சரியான முறையில் வழி காட்டவில்லை. எனவே எனக்கு உதவும் இன்னொரு குருவை நான் நாடுவேன்" என்று சீடன் நினைப்பானாகில் அது நம்பிக்கை இன்மையாகும். இது தகாது. மந்திரத்தில் மந்திரசக்தி அடங்கியுள்ளது. தீட்சை அதைத் தட்டி எழுப்புகிறது. பயிற்சியும் பக்தியும் சீடனைப் பூரணனாக்குகிறது.

சாஸ்திர அறிவைப் புகட்டும் ஆசிரியர் வித்யா குரு ஆவார்.

தத்தாத்ரேய பகவான் மற்றும் ஸ்ரீமத் பாகவதத்தைப் பற்றித் தெரிந்தவர்கள் அவருக்கு ஒரே ஒரு குருதான் இருந்தார் என்பதை அறிவார்கள். தேனீ பல பூக்களிலிருந்து தேனைச் சேகரிப்பது போல அவரும் பல இடங்களிலிருந்து அறிவைச் சேகரித்து தனது குரு சொன்னது சரி எனத் தேர்ந்தார்.

வந்தே குருபதத்வந்த்வம் வாங்மனோதீதகோசரம் ।
ச்வேதரக்தப்ரபா பின்னம் சிவசக்த்யாத்மகம் பரம் ॥ 90 ॥

90. வெள்ளை மற்றும் சிவப்பு நிறங்களில் அமைந்ததும் மேலான சிவ, சக்தி பிரபையுடன் கூடிய ஒளி பொருந்திய

வாக்கு, மனம், புலன்களுக்கு எட்டாதவையுமாகிய குருவின் இரு திருவடிகளை நான் வணங்குகிறேன்.

குறிப்புகள் : இந்த சுலோகத்தில் குரு தத்துவமும் சிவசக்தி தத்துவமும் மிக அழகிய முறையில் இணைகின்றன. சிவசக்தி தத்துவமும், குரு தத்துவமும் உண்மையில் ஒன்றே என்பதை இந்த சுலோகம் எடுத்துக்காட்டுகிறது.

இந்த சுலோகம் சாதகர்களின் தியானத்திற்குப் பெரிதும் உதவுகிறது. இந்த சுலோகத்தின் உட்பொருளை யார் ஆழ்ந்து சிந்திக்கிறார்களோ அவர்கள் மிக ஆழ்ந்து தியானிக்கவும் முடியும். சிவசக்தி தத்துவம் குருதத்துவத்தில் லயமாகிவிடுகிறது.

குகாரம் ச குணாதீதம் ருகாரம் ரூபவர்ஜிதம் ।
குணாதீதமரூபம் ச யோ தத்யாத் ஸகுரு ஸ்மிருத: ॥ 91 ॥

91. 'கு' முக்குணங்களையும் கடந்த குருவின் நிலையையும், 'ரு' உருவங்களிலிருந்து விடுபட்ட நிலையையும் குறிக்கின்றன. முக்குணங்கள் மற்றும் உருவங்கள் கடந்த நிலையை அளிப்பவர் எவரோ அவரே குரு.

குறிப்புகள் : குரு சீடனை முக்குணங்களிலிருந்தும் விடுவிக்க வல்லவர். நாம ரூபங்கள் எனும் மயக்கத்திலிருந்தும் அவர் சீடனை விடுவிக்கிறார்.

உங்களுக்கு இதை எவர் செய்கிறாரோ, அவரே உண்மை குரு.

அத்ரிநேத்ர : சிவ : ஸாக்ஷாத் த்விபாஹுஸ்ச ஹரி : ஸ்மிருத: ।
யோஅசதுர்வதனோ ப்ரஹ்மா ஸ்ரீகுரு: கதித : ப்ரியே ॥ 92 ॥

92. அன்புக்குரிய பார்வதியே! முக்கண் இல்லாத சிவனே குரு. இரு கைகளை உடைய ஹரியே குரு. நான்முகமற்ற பிரம்மாவே குரு.

குறிப்புகள் : இரு கண்களுடன் கூடியே குருவே சிவன். இரு கரங்களுடன் இருப்பினும் அவரே ஹரி. ஒரு முகம் இருந்தாலும் அவரே பிரம்மா. புறத்தே பார்ப்பதற்கு பிரம்மா, விஷ்ணு, சிவனின் சின்னங்கள் இல்லாவிடினும், சிஷ்யனுக்கு அவர் அவர்களாகவே திகழ்கிறார்.

**அயம் மயாஞ்ஜலிர்பத்தோ தயாஸாகர ஸித்தயே ।**
**யதனுக்ரஹதோ ஜந்துஸ்சித்ரஸம்ஸார முக்தி பாக் ॥ 93 ॥**

93. எவருடைய கருணையினால் உயிர்கள் இந்த அற்புதமான ஸம்ஸாரத்திலிருந்து முக்தி அடைகின்றார் களோ அந்தக் கருணைக் கடலுக்கு என் நமஸ்காரம்.

குறிப்புகள் : குரு கிருபை என்பது மிகவும் குறிப்பிடத் தக்கது. சிவபெருமான் குரு என்ற வார்த்தையைச் சொல்லாமலேயே இந்த சுலோகத்தில் குரு கிருபையைக் குறிப்பிடுகிறார்.

**ஸ்ரீகுரோ: பரமம் ரூபம் விவேக சக்ஷுரக்ரத: ।**
**மந்தபாக்யா ந பச்யந்தி அந்தா : ஸூர்யோதயம் யதா ॥ 94 ॥**

94. உதயசூரியனை குருடர்களால் எவ்வாறு பார்க்க இயலாதோ அதுபோல ஞானக் கண்ணால் காணத்தக்க மேலான குருவின் ரூபத்தை மந்த புத்தியுடைய அதிருஷ்டமில்லாதவர்கள் பார்ப்பதில்லை.

குறிப்புகள் : மந்த புத்தி உடையவன் குருவின் பிரகாசம் பொருந்திய ரூபத்தைக் காண்பதில்லை. குருவுடன் பல வருடங்கள் வாழ்ந்திருந்தாலும் கூரிய விவேக புத்தி இல்லாத சீடனால் குருவின் உண்மையான ரூபத்தையும்

பெருமையையும் உணரமுடியாது. பல நாட்கள் நீரினுள் கல் அமிழ்ந்திருந்தாலும், கல்லினுள் சிறிதும் நீர் போவதில்லையோ, அது போல எத்தனை காலம் குருவுடன் வாழ்ந்திருந்தாலும் போதிய தகுதி இல்லாத சீடனால் குருவின் போதனைகளை உணர முடியாது. தகுதியுள்ள தரமான சீடனிடம் தான் குருவின் அனுக்ரஹம் இறங்குகிறது. தங்களது நம்பிக்கை மற்றும் பக்தியினால் சீடர்கள் குருவின் கருணையைப் பெறுகின்றனர்.

***குலானாம் குலகோடீனாம் தாரகஸ்தத்ர தத்க்ஷணாத் |***
***அதஸ்தம் ஸத்குரும் ஜ்ஞாத்வா த்ரிகாலம் அபிவாதயேத்***
***|| 95 ||***

95. ஒரு குலத்துக்கு மட்டுமின்றி கோடி குலங்களுக்கு உடனேயே நற்கதியை அருள்பவர் குரு. இதை அறிந்து ஒருவன் தினமும் மூன்றுவேளையும் ஸத்குருவை வணங்க வேண்டும்.

குறிப்புகள் : அந்தணர்களுக்கும் மற்ற இரு வர்ணத் தாருக்கும் ஸந்த்யா வந்தனம் செய்வது எவ்வாறு கட்டாயமாக விதிக்கப்பட்டிருக்கின்றதோ அதுபோல சீடனுக்கு தினமும் மூன்று வேளை குரு வழிபாடு விதிக்கப்பட்டிருக்கிறது. சீடனுக்கு குருதான் அனைத்து தெய்வமாக விளங்குவதால், குருவையே அவன் பக்தியுடன் வழிபட வேண்டும்.

***ஸ்ரீநாத சரணத்வந்த்வம் யஸ்யாம் திசி விராஜதே |***
***தஸ்யாம் திசி நமஸ்குர்யாத் பக்த்யா ப்ரதிதினம் ப்ரியே***
***|| 96 ||***

96. எனது அருமை பார்வதியே! எந்தத் திசையில் குருவின் சரணங்கள் பதிகின்றனவோ, அந்தத் திசைக்கும் இடத்திற்கும் தினமும் பிரார்த்தனை செய்யப்படட்டும்.

குறிப்புகள் : குருவிடமிருந்து அகன்று வெகு தொலைவில் வசிக்கும் சீடனுக்கு இது பொருந்தும். நேரடியாகத் தொடர்பு கொள்ள முடியாத நிலையில், குரு வசிக்கும் திசையை நோக்கி சீடன் பக்தியுடன் தொழ வேண்டும்.

**ஸாஷ்டாங்கப்ரணிபாதேன ஸ்துவன் நித்யம் குரும்பஜேத் /**
**பஜனத்ஸ்தைர்யமாப்னோதி ஸ்வஸ்வரூபமயோ**
**பவேத் // 97 //**

97. தினமும் ஒருவன் தன் குருவை ஸாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம் செய்யவேண்டும். இத்தகைய நமஸ்காரத்தால் ஒருவன் உறுதியையும், இறுதியில் தனது யதார்த்த நிலையைப் பற்றிய அறிவையும் அடைகிறான்.

சீடனின் உள் 'பாவ'த்தை வெளிக்காட்டும் ஒரு செயலே இது. எங்கே 'பாவம்' (உணர்ச்சி) இல்லையோ அங்கே புறச்சின்னங்களும் இருக்கமாட்டா. உள்ளே எத்தகைய பக்தி, சிரத்தை உள்ளது என்பதை பெரியோர் முன் ஒருவன் நடந்து கொள்ளும் விதமானது வெளிப்படுத்திவிடும். ஒருவன் எப்படி நடக்கிறான், நிற்கிறான், பார்க்கிறான், பேசுகிறான் என்பதைப் பொறுத்து அவனது மனத்தின் தன்மையைக் கூறிவிடலாம். பேசாவிட்டாலும் பார்வையினாலேயே மனத்தில் உள்ளது புலப்பட்டுவிடும். முகம் மனத்தின் கண்ணாடி. கண்களிலிருந்தும் பார்வையிலிருந்தும் எதையும் நாம் மறைத்துவிட முடியாது.

**தோர்ப்யாம் பத்ப்யாம் ச ஜானுப்யாமுரஸா சிரஸா தசா /**
**மனஸா வசஸா சேதி ப்ரணாமோஷ்டாங்க உச்யதே //98 //**

இரண்டு கைகள், கால்கள், முழங்கால்கள், தொடைகள், தலை இவற்றுடன் மனம், வாக்கு மற்றும் பார்வையால் ஒருவன் தரைமீது படிந்து குருவை நமஸ்கரிக்க வேண்டும்.

உடல், மனம் மற்றும் இந்திரியங்கள் உள்ளிட்ட இத்தகைய நமஸ்காரமே ஸாஷ்டாங்க ப்ரணாமம் எனப்படுகிறது.

குறிப்புகள் : இரண்டு கைகள், கால்கள், கணுக்கால்கள், மற்றும் தொடைகள் நமஸ்காரத்தில் ஈடுபட்டாலும் ஒவ்வொரு இரட்டையும் ஒன்றாகவே கருதப்படுகிறது. எனவே இந்த நான்கு இரட்டையும் நான்காக மட்டுமே கணக்கில் கொள்ளப்படுகிறது.

கையை அசைத்தோ, வெறும் புன்னகையினாலோ அல்லது வெறும் தலையை மட்டும் அசைப்பதாலோ செய்யப்படுவது உண்மையான நமஸ்காரமாகாது. இத்தகைய நமஸ்காரத்தில் உண்மையான 'பாவம்' இருக்காது. சான்றோராலும் கற்றோராலும் இது நமஸ்காரமாக ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை.

***தஸ்யை திசே ஸததமஜ்ஜலிரேஷ நித்யம்***
***ப்ரக்ஷிப்யதாம் முகரிதைர்மதுரை : ப்ரஸூனை : ॥***
***ஜாகர்தி யத்ர பகவான் குரு சக்ரவர்த்தீ***
***விச்வஸ்திதி ப்ரலய நாடக நித்ய ஸாக்ஷி ॥ 99 ॥***

99. இந்த உலகின் தோற்றம், இருப்பு மற்றும் பிரளய நாடகத்தை என்றென்றும் சாட்சியாகக் கண்டு கொண்டிருக்கும் பேரரசருக்கிணையான குருபகவான் எங்கு விளங்குகிறாரோ, அந்த திசையை நோக்கி அன்றலர்ந்த பூக்களுடன் கூடிய கரங்களால் நமஸ்கரிக்கப்படட்டும்.

குறிப்புகள் : குரு தன்னுடன் இல்லாத பொழுது அவர் இருக்கும் திசையை நோக்கி பய பக்தியுடன் வணங்கும் ஒரு சிடனின் உயர்ந்த மனோ நிலையை இந்த சுலோகம் விளக்குகிறது.

தங்களது உடல், பொருள், ஆவி அனைத்தையும் ஸ்ரீகிருஷ்ணர்பால் இழந்து நின்ற பிருந்தாவனக் கோபிகைகளின் நிலைமைக்கு நிகரானது இது. கிருஷ்ணரது உணர்வில் தன்மயமாய் விட்ட அவர்கள் கிருஷ்ணமயமாக ஆகிவிட்டனர். குரு 'பாவ'த்தினால் நிரம்பிய சீடன் குருமயமாக ஆகிவிடுகிறான்.

**அப்யஸ்தை: கிமு தீர்ககால விமலைர்வ்யாதி ப்ரதைர்துஷ்கரை:**
**ப்ராணாயாம சதைரநேககர ணைர்து:காத்மகைர்துர் ஜயை : ।**
**யஸ்மின்னப்யுதிதே விநச்யதி பலீ வாயு : ஸ்வயம் தத்க்ஷணாத்**
**ப்ராப்தும் தத்ஸஹஜஸ்வபாவமநிசம் ஸேவேத சைகம் குரும் ॥100॥**

100. யோகமார்க்கத்தில் எல்லா சிக்கல்களும் தீர்ந்து மிகவும் விரும்பத்தக்க ஆனந்தமயமான ஸஹஜாவஸ்தை எந்த குருவின் கருணையினால் கிட்டுமோ அதை விடுத்து எண்ணற்ற மூச்சுப் பயிற்சிகளாலும், கஷ்டமான, நீண்ட ஐயத்துக்கும் வியாதிகளுக்கும் இலக்கான பயிற்சிகளால் என்ன பயன்? எனவே இரண்டற்ற ஒரே ஸத்குருவை மட்டுமே ஒருவன் வணங்க வேண்டும்.

குறிப்புகள் : பல்வேறு சிக்கலான யோகப் பயிற்சிகளுடன் ஒப்பிடுகையில் மோக்ஷம் அல்லது பரமானந்தத்தை அடைவிக்கவல்ல எளிய சாதனமான குருசேவா யோகத்தின் மேன்மையும் சிறப்பும் இங்கே சுட்டிக் காட்டப்படுகிறது. ஏனெனில் ஸஹஜ அவஸ்தையை அடைய மிக எளிய ஒரே மார்க்கம் குருசேவைதான். அதை அடைவது என்பது ஒருவரது இயல்பான தன்மையான ஸத் சித் ஆனந்த நிலையில் ஒருவன் யாண்டும் உள்ளான் என்பதை உணர்வதுதான். இது குரு உபதேசத்தினால் மட்டுமே கிட்டவல்லது.

**ஞானம் வினா முக்திபதம் லப்யதே குருபக்தித : ।**

குரேள : ப்ரஸாததோ நான்யத் ஸாதனம் குருமார்கிணாம்
|| 101 ||

*101.* குருபக்தி இருந்தால் ஞானம் இன்றியே ஒருவனுக்கு முக்தி நிலை கிட்ட வாய்ப்புண்டு. குருவிடம் அனன்ய பக்தி கொண்டு விளங்கினால் குருவின் கருணையின்றி வேறு சாதனை எதுவும் தேவையில்லை.

குறிப்புகள் : சுலோகத்தின் இரண்டாவது அடியில் '*ப்ரஸாததோ*' என்ற வார்த்தைக்குப் பதில் '*ஸமானதோ*' என்ற பதமும் பயன்படுத்தப்படுகிறது.

பலருக்கு இது புதுமையாகத் தோன்றலாம். '*ரிதே ஞானம் நமுக்தி* : "- ஞானம் இன்றி மோட்சம் இல்லை என்றுதான் சுருதி திட்டவட்டமாகத் தெரிவிக்கிறது. இந்த சுலோகம் குருவிடம் மனப்பூர்வமாக ஈடுபாடு கொண்டவனும், குருசேவையிலேயே ஈடுபட்டவனுமாகிய சீடன் குருவின் கருணையால் ஞானத்தை அடைகிறான் என்று தெரிவிக்கிறது. வேறுவிதமாகச் சொன்னால் அவனது குருபக்தியே எந்த முயற்சியும் இன்றி ஞானத்தை அவனுக்கு இயல்பாக அளிக்கிறது.

சாந்தோக்ய உபநிஷத்தில் ஸத்ய காம ஜாபாலன் மற்றும் உபகோசலனின் கதையைக் காண்கிறோம். இங்கே சிஷ்யனான உபகோசலனின் தொண்டினால் மனம் மகிழ்ந்த அக்னிதேவன் அவனுக்குப் பிரம்மஞானத்தைப் புகட்டுகிறான். ஆசிரமத்திற்கு அவன் திரும்புகையில் பிரம்மஞானத்தினால் அவன் ஒளிர்வதைக் குரு காண்கிறார். "பிரம்ம தேஜஸுடன் நீ இப்பொழுது பிரகாசிக்கிறாய். உனக்கு பிரம்ம வித்தையைப் புகட்டியது யார் என்பதை உண்மையாகக் கூறு", என்று குரு சீடனிடம் கேட்கிறார். "குருவே! எனது தகுதியை அறிந்து அக்னிதேவன் எனக்கு பிரம்ம ஞானத்தினைப்

புகட்டினார்' என்று உபகோசலன் கூறுகிறான். இங்கு குருசேவை அவனுக்கு ஞானத்தை நல்கியது. அக்னிதேவனது உபதேசம் குருகிருபையேயன்றி வேறல்ல.

***யஸ்மாத்பரதரம் நாஸ்தி நேதி நேதீதி வை சுருதி : |***
***மனஸா வசஸா சைவ ஸத்ய மாராதயேத் குரும் || 102 ||***

***102.*** 'நேதி, நேதி - இது அல்ல, இது அல்ல" என்று சுருதிகள் கூறுகின்றன. இவ்விதம் சொல்லி அந்த ஒன்றிற்கு அப்பால் ஒன்றுமில்லை - அந்த தத்துவமே குரு ஆகும். எனவே ஒருவன் மனம், வாக்கு, செயல்கள் ஆகிய திரிகரணத்தால் குருவை வழிபட வேண்டும்.

***குரோ : க்ருபாப்ரஸாதேன ப்ரம்ம விஷ்ணு சிவாதய : |***
***ஸாமர்த்யமபஜன் ஸர்வே ஸ்ருஷ்டிஸ்தித் யந்தகர்மணி***
***|| 103 ||***

***103.*** குருவின் கிருபையினால் தான் பிரம்மா, விஷ்ணு, சிவன் முதலானோர் படைத்தல், காத்தல், அழித்தல் முதலான தங்களது தொழில்களைச் செய்யும் திறம் பெற்றனர். எனவே ஒருவன் யாண்டும் குருவை நமஸ்கரிக்க வேண்டும்.

குறிப்புகள் : ஆக்கும், காக்கும், கரக்கும் சக்தி அனைத்துமே குரு என்று சொல்லப்படுவதால் இந்த சுலோகம் குருவும் பிரம்மமும் ஒன்றே என்பதைக் காட்டுகிறது.

***தேவகின்னர கந்தர்வா: பித்ருயக்ஷாஸ்து தூம்புரு: |***
***முனியோபி ந ஜானந்தி குருசுச்ரூஷணே விதிம் || 104 ||***

***104.*** தேவர்கள், கின்னரர்கள், கந்தர்வர்கள், பித்ருக்கள், யக்ஷர்கள், தும்புரு முதலான முனிவர்கள் கூட குருவிற்கு

எவ்விதம் நேரிய தொண்டு செய்வது என்பதை அறியமாட்டார்கள்.

குறிப்புகள் : குருசேவை என்பது மிகவும் கடினமானது. தான் விரும்பும் விதத்தில் குரு திருப்தி அடைவார் என்று நினைத்து குருவிற்கு சிஷ்யன் தொண்டு செய்யலாம். ஆனால் அவனது தொண்டினால் குரு திருப்தி அடையாமல் இருக்கலாம். குருவினுடைய உள்ளத்தை அறிந்து, அவரது விருப்பம், சுபாவம் இவற்றை உணர்ந்து அவரைத் திருப்திப்படுத்தும் விதத்தில் தொண்டு செய்வதில்தான் குருசேவையின் முக்கியத்துவம் அடங்கியிருக்கிறது.

சீடனிடம் பிரம்மஞானம் தோன்றினால் குருகிருபை அவனுக்குக் கிட்டிவிட்டது என்று பொருள். தொண்டுகள் யாவும் ஞானத்திற்கும், குருகிருபைக்கும் முன் தேவைகளாகும்.

அஹங்காரம் முற்றிலும் இல்லாதிருப்பதுவே குரு கிருபையைப் பெறுவதற்கான தகுதியாகும். சுலோகத்தில் சொல்லப்பட்டுள்ள தேவ, கின்னரர் முதலானோர் அஹங்காரத்திலிருந்து விடுபடாத காரணத்தால் உண்மையான குருசேவை எது என்பது அவர்களுக்குத் தெரியாது.

**தார்கிகாஸ்சாந்தஸாஸ்சைவ தைவக்ஞா : கர்மடா :**
**ப்ரியே I**
**லெளகிகாஸ்தே ந ஜானந்தி குருதத்வம் நிராகுலம் II 105 II**

105. தர்க்கசாஸ்திரம், வேத சந்தங்கள், தேவதைகளை உணர்ந்தவர்கள், கர்ம காண்டிகள், உலக ஞானம் வாய்த்தவர்கள் இவர்கள் எவருமே குரு தத்துவத்தை முற்றிலும் அறிந்தவர்கள் அல்லர்.

குறிப்புகள் : சென்ற சுலோகத்தில் சொல்லப்பட்ட கருத்துக்களின் தொடர்ச்சியே இந்த சுலோகத்திலும் காணப்படுகிறது. குருதத்துவம் மற்றும் அதன் முக்கியத்துவத்தைப் பற்றி இந்த சுலோகம் கூறுகிறது. சென்ற சுலோகம் குருதத்துவத்தின் முக்கியத்துவத்தை உணர்த்திற்று.

இந்த சுலோகத்தில் குறிப்பிடப்பட்டுள்ளவர்களது இலட்சியம் முழுக்க முழுக்க ஆன்மீகமல்ல. அவர்கள் பல்வேறு விஞ்ஞானத்தை வலியுறுத்துகின்றனர். விவேகம், வைராக்கியம் பொருந்தியவர்கள், மோட்சத்தை அடைய முயல்பவர்கள் பிரம்ம ஞானத்தை நாடுகின்றனர். அவர்களுக்கு குருவின் உதவி இன்றியமையாதது. எனவே மேற்கூறியவர்களைக் காட்டிலும் சாதகர்களே குருதத்துவத்தை உண்மையில் உணர்ந்தவர்கள் ஆவார்கள்.

***மஹாஹங்காரகர்வேண தபோவித்யா பலேன ச /***
***ப்ரமந்த்யேதஸ்மின் ஸம்ஸாரே கடீயந்த்ரம் யதா புன:***
***II 106 II***

*106.* ஆணவம், கர்வம், தபோபலம், கல்வி ஆகியவற்றின் செருக்கினால் நீர் இறைக்கும் இயந்திரத்தைப் போல இவ்வுலகில் மக்கள் அலைந்து திரிகின்றார்கள்.

குறிப்புகள் : நீர் இறைக்க உதவும் யந்திரம் ஸம்ஸார சக்கரத்திற்கு சிறந்த உதாரணமாகும். அஹங்காரத்தாலும் கர்வத்தாலும் தூண்டப்பட்டு இங்கு எல்லோரும் ஏதாவதொரு வேலையில் ஈடுபட்டு பந்தத்தில் சிக்குறுகின்றார்கள். சம்சார சக்கரம் சுற்றிச் சுழல்கிறது, இந்தச் சக்கரத்தில் வேறு வழியின்றி அகப்பட்டுக்கொண்ட ஜீவர்கள் செயல்படுகின்றனர்.

*யக்ஞினோபி ந முக்தா : ஸ்யு : ந முக்தா யோகினஸ்ததா /*
*தாபஸா அபி நோ முக்தா குருதத்வாத் பராங்முகா :*
*// 107 //*

*107.* பெரிய யாகங்களைச் செய்பவர்களோ, யோகிகளோ, அல்லது சிரிய தபம் செய்பவர்களோ குரு தத்துவத்தை உண்மையாக உணர்ந்தாலன்றி முக்தி அடைய முடியாது.

குறிப்புகள் : யோகத்தில் தேர்ச்சி பெற்றிருக்கும் யோகியாலோ அல்லது கடும் தபம் செய்து தன் உடலை வருத்திய தவசியாலோ குருவிடம் பக்தி இருந்தாலன்றி ஆத்மஞானத்தை அடையமுடியாது. கர்மகாண்டி அல்லது மந்திர தந்திர சாஸ்திரத்தில் தேர்ச்சி பெற்றவர்களாலும் இது சாத்தியமல்ல.

ந முக்தாஸ்து கந்தர்வா : பித்ருயக்ஷாஸ்து சாரணா: /
ருஷய : ஸித்ததேவாத்யா : குருஸேவாபராங்முகா :
*// 108 //*

*108.* கந்தர்வர்கள், பித்ருக்கள், யக்ஷர்கள், சாரணர்கள், ரிஷிகள், ஸித்தர்கள், தேவர்கள் எவராயிருந்தாலும் குருசேவையைப் புறக்கணித்தால் பிறப்பிறப்பாகிய ஸம்ஸாரச் சுழலிலிருந்து ஒருபோதும் தப்பமுடியாது.

*இதி ஸ்ரீஸ்காந்தோத்தரகண்டே உமா மஹேஸ்வர*
*ஸம்வாதே ஸ்ரீ குருகீதாயாம் ப்ரதமோ அத்யாய :*

என்று ஸ்காந்த புராணத்தின் உத்தரகாண்டத்தில் உமா மஹேஸ்வர சம்வாதத்தில் குரு கீதையின் முதல் அத்யாயம் முற்றும்.

## அத்யாயம் 2

***த்யான ச்ருணு மஹாதேவி ஸர்வானந்தப்ரதாயகம் /***
***ஸர்வஸௌக்யகரம் சைவ புக்தி முக்திப்ரதாயகம் // 109 //***

*109.* மஹாதேவி ! எல்லா ஆனந்தம், மகிழ்ச்சி மற்றும் இன்பத்தை நல்கவல்ல குருத்யானம் செய்யும் முறையைப் பற்றிக் கேட்பாயாக. பக்தி, முக்தி, அனைத்து நலன்களையும் அது நல்கவல்லது.

குறிப்புகள் : இந்த சுலோகத்திலிருந்து தொடங்கி 125வது சுலோகம் வரை குரு தியானம் செய்யும் முறை விளக்கப்பட்டுள்ளது. சாதகர்கள் அவர்களுக்கு உகந்த ஏதாவது ஒரு முறையை கடைப்பிடிக்கலாம். பல முறைகளைச் சேர்த்தும் முடிந்தால் கடைப்பிடிக்கலாம்.

உலகச் செழிப்பும் இன்பமும் பக்தியாகும். பிறப்பிறப்புச் சக்கரத்திலிருந்து விடுபடுவது முக்தியாகும்.

***ஸ்ரீ மத்பரம் பிரம்ம குரும்ஸ்மராமி***
***ஸ்ரீ மத் பரம் பிரம்ம குரும் பஜாமி।***
***ஸ்ரீமத் பரம் பிரம்ம குரும் வதாமி***
***ஸ்ரீமத் பரம் பிரம்ம குரும் நமாமி // 110 //***

ஸத்குருவை நான் தியானிக்கிறேன். பரப் பிரும்மமான ஸத்குருவை நான் வணங்குகிறேன். ஸத்குருவைப் பற்றியே நான் பேசுகிறேன். ஸத்குருவை நான் நமஸ்கரிக்கிறேன்.

குறிப்புகள் : மனம் மற்றும் உடலின் பல்வேறு செயல்கள் குருவை நோக்கியதாகவே அமைகின்றன. குருவின் சொரூபத்தையே தியானிக்க வேண்டும். பதினாறு வகை உபசாரங்களுடன் பகவானை நீங்கள் வணங்குவது போலவே குருவையும் வணங்க வேண்டும். குருவைப் பற்றியும், அவரது வாழ்வு, போதனைகளைக்

குறித்தும் மற்றும் உள்ள சீடர்களிடமும் பக்தர்களிடமும் பேசுங்கள். 97வது சுலோகத்தில் கூறப்பட்டுள்ளபடி தரை மீது படிந்து விழுந்து குருவின் பாதங்களைத் தொட்டு வணங்கி சாஷ்டாங்க நமஸ்காரம் செய்யுங்கள். வலது கை குருவின் வலது பாதத்தையும் இடக்கை இடது பாதத்தையும் தொட வேண்டும்.

இது மானஸீகமாகவும் உடலாலும் செய்யப்படலாம். தியானத்தின் பொழுது முன்னால் குரு இருக்கலாம் அல்லது இல்லாமலிருக்கலாம். எனவே தியானத்தின் போது ஒருவன் மானஸீக நமஸ்காரமே செய்ய வேண்டும்.

**ப்ரம்மானந்தம் பரமஸுகதம் கேவலம் ஞானமூர்த்திம்**
**த்வந்வாதீதம் க்கனஸத்ருசம் தத்வமஸ்யாதி லக்ஷ்யம் ।**
**ஏகம் நித்யம் விமலமசலம் ஸர்வதீஸாக்ஷிபூதம்**
**பாவாதீதம் த்ரிகுணரஹிதம் ஸத்குரும் தம் நமாமி ॥ 111 ॥**

111. பிரம்மானந்தமாயுள்ளவரும், பரம சுகத்தைத் தருபவரும், ஞான மூர்த்தியாயிருப்பவரும், இரண்டற்றவரும், ஆகாயத்தைப் போல பறந்து விரிந்தவரும், தத்வம்அஸி மகாவாக்கியத்தால் குறிப்பிடப்படுபவரும், நித்தியமாக, மாறாதவராக, ஒன்றாக, அனைத்து அறிவின் சாட்சியாக விளங்குபவரும், அனைத்து மனோ நிலைகளுக்கும், முக்குணங்களுக்கும் அப்பாற்பட்டவராகவும் விளங்குகின்ற சத்குருவை நமஸ்கரிக்கிறேன்.

நிர்க்குணப் பிரம்மத்தின் அனைத்து அம்சங்களையும் அடக்கிய முக்கியமான ஒரு பிரார்த்தனை இதுவாகும். இதில் அடங்கியுள்ள உண்மைகளை உணர்ந்தால் இன்பநிலை தானே வந்தெய்தும். சாதகர்களிடையே மிகவும் பிரபலமான சுலோகம் இது. இதில் கூறப்பட்டுள்ள பல்வேறு கருத்துக்களிடையே மிகச் சிறந்ததாக கருதும் எண்ணத்தில் சாதகன் நெடுநேரம் மனத்தை லயிக்கச்

செய்தால் ஆழ்ந்த தியானத்தை நெடிது அனுபவிக்க முடியும்.

***ஹ்ரதம்புஜே கர்ணிகமத்ய ஸம்ஸ்தே***
***ஸிம்ஹாஸனே ஸம்ஸ்தித திவ்ய மூர்த்திம் ।***
***த்யாயேத்குரும் சந்த்ரகலா ப்ரகாசம்***
***ஸச்சித்ஸுகா பீஷ்டவரம் ததானம் ॥ 112 ॥***

*112.* இதயத்தாமரையாம் தெய்வீக சிம்மாசனத்தில் குரு அமர்ந்திருப்பவராக சீடன் தியானிக்க வேண்டும். பூர்ண சந்திரனைப் போல பிரகாசிக்கும் குருவின் தெய்வீகத் திருவுருவில் அவன் தியானிக்கவேண்டும். ஸத், சித், ஆனந்தப் பெருநிலையை அது சீடனுக்கு அளிக்கவல்லது.

குறிப்புகள் : மேலே கூறப்பட்ட திவ்வியப் பொருள்களின் மீது சீடனின் எண்ணங்கள் லயிக்கையில் அவன் பரமானந்தத்தை அனுபவிக்கிறான். உலகாயத எண்ணங்களையும், பிற குழப்பங்களையும் அவை இல்லா தாக்கும்.

***ஸ்வேதாம்பரம் ஸ்வேதவிலேப புஷ்பம்***
***முக்தா விபூஷம் முதிதம் த்விநேத்ரம் ।***
***வாமாங்க பீடஸ்தித திவ்யசக்திம்***
***மந்தஸ்மிதம் பூர்ணக்ருபாநிதானம் ॥ 113 ॥***
***ஞானஸ்வரூபம் நிஜபாவயுக்தம்***
***ஆனந்தமானந்தகரம் ப்ரஸன்னம் ।***
***யோகீந்த்ரமீட்யம் பவரோக வைத்யம்***
***ஸ்ரீமத்குரும் நித்யமஹம் நமாமி ॥ 114 ॥***

*113 & 114* யோகீந்திரராக விளங்குபவரும், வணங்கத் தக்கவரும், பிறப்பிறப்பெனும் வியாதியை நீக்கவல்ல வைத்தியராக விளங்குபவரும், எப்பொழுதும் இன்பமயமாயிருப்பவரும், தாமே ஆனந்தமயமாயிருந்து

ஆனந்தத்தை அனைவருக்கும் நல்குபவரும், ஞானம் நிறைந்த ஆத்ம ஞானத்தால் ஒளிர்பவரும், வெள்ளைப் பூக்களுடன் வெள்ளை ஆடை தரித்தவராக, இடப்புறம் தெய்வீக சக்தியுடன் கூடியவராகவும், தமது கிருபா கடாட்சத்தால் இருகண்களாலும் அனைவர் மீதும் கருணையைப் பொழிபவருமான ஸத்குருவை நான் தினமும் வணங்குகிறேன்.

*வந்தே குரூணாம் சரணார விந்தம்*
*ஸந்தர்சிதஸ்வாத்ம ஸுகாம்புதீனாம் ।*
*ஜனஸ்ய யேஷாம் குலிகாயமானம்*
*ஸம்ஸார ஹாலாஹல மோஹ சாந்த்யை ॥ 115 ॥*

*115.* ஸம்ஸாரமாகிய ஆலஹால விஷத்திற்கு மாற்றுமருந்து அளித்தவர்களும், ஆத்மனிலிருந்து எழுந்த நித்திய ஆனந்த சாகரத்தின் மூலத்தை நமக்குக் காட்டியவர்களுமான அந்த குருமார்களின் திருவடித் தாமரைகளை நான் வணங்குகின்றேன்.

குறிப்புகள் : இங்கே அனைத்து குருமார்களுக்கும் ஒட்டு மொத்தமாக வணக்கம் தெரிவிக்கப்படுகிறது. குரு பரம்பரையே ஈண்டு நமஸ்கரிக்கப்படுகிறது.

தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்த பொழுது வாசுகி எனும் பாம்பின் வாயிலிருந்து வெளிப்பட்ட பயங்கர நஞ்சே ஆலகால விஷம். ‘அமிருத மதனம்’ (பாற்கடல் கடைதல்) கதை ஸ்ரீமத்பாகவதத்தில் வருகிறது.

*யஸ்மின் ஸ்ருஷ்டிஸ்திதித்வம்ஸ நிக்ரஹானுக்ரஹாத்மகம் ।*
*க்ருத்யம் பஞ்சவிதம் சச்வத பாஸதே தம் குரும் பஜேத்*
*॥ 116 ॥*

*116.* எவரிடத்தில் ஸ்ருஷ்டி (ஆக்கல்), ஸ்திதி (காக்கல்), த்வம்ஸ (அழித்தல்), நிக்ரஹம் (தண்டனை), அனுக்ரஹம் (ஆசிர்வாதம்) என்ற ஐவகையான அருள் உள்ளதோ அந்த குருவை வணங்குகிறேன்.

குறிப்புகள் : பகவானது திவ்விய குணங்களை சீடன் தன் குருவிடம் ஏற்றிக் காண வேண்டும். இங்கே குறிப்பிடப்பட்டுள்ள சக்திகள் இறைவனைச் சார்ந்தவை. முதல் அத்யாயத்தில் சொல்லப்பட்டது போல சீடனின் பார்வையில் குரு மிகவும் முக்யத்வம் வாய்ந்தவர். வெளியுருவில் மற்றவர்களைப் போல மனிதராகத் தோன்றினாலும் சீடன் குருவை இறைவனாகக் கருதி அவரிடமிருந்து அருளையும் ஆற்றலையும் பெற வேண்டும்.

***பாதாப்ஜே ஸர்வஸம்ஸார தாவகாலானலம் ஸ்வகே |***
***ப்ரம்மரந்த்ரே ஸ்திதாம்போஜ மத்யஸ்தம் சந்திர மண்டலம்***
***|| 117 ||***

*117.* குரு தமது பாதத் தாமரைகளில் (சீடனின்) சம்சாரமாகிய காடு முழுவதையும் சுட்டுப் பொசுக்கவல்ல காட்டுத்தீயையும், தமது சிரஸில் சம்சாரத்தீயை அணைத்து சீடனுக்கு அமரத்தன்மையை அளிக்க வல்ல சந்திரனுக்கு நிகரான அமிருதத்தையும் பெற்று விளங்குகிறார்.

குறிப்புகள் : இந்த சுலோகத்தில் காணப்படும் கருத்து அடுத்த சுலோகத்தில் பூர்த்தி அடைகிறது. எனவே வினைச்சொல் அடுத்த சுலோகத்தில் வருகிறது. பொருத்தமான வினைச் சொற்களைச் சேர்ப்பதால் இதில் கூறப்படும் கருத்து முழுமை பெறுகிறது.

***அகதாதித்ரிரேகாப்ஜே ஸஹஸ்ரதள மண்டலே |***
***ஹம்ஸபார்ச்வத்ரிகோணே ச ஸ்மரேத்தன்மத்யகம் குரும்***
***|| 118 ||***

*118.* அகாரம், ககாரம், தாகாரம் எனப்படும் மும்மண்டலங்களை மூன்று கோடுகள் குறிக்கும். முக்கோணத்தில் ஆயிரம் இதழ்களைக் கொண்ட தாமரையில் வீற்றிருப்பவராக ஒருவன் குருவைத் தியானிக்க வேண்டும்.

குறிப்புகள் : மந்திரசாஸ்திரத்தைப் பற்றிய சகல குறிப்புகளும் மந்த்ரமஹோததி என்பன போன்ற நூல்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. முக்கோணத்தில் உள்ள பல்வேறு எழுத்துகள் மற்றும் ஒலிகள், மண்டலங்களின் ரகசியங்கள் அவற்றில் விரிவாக எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன. இங்கே ஒரு சிறு குறிப்பு தான் தரப்பட்டிருக்கிறது. மந்திரமஹோததி போன்ற பிரபல மந்திர சாஸ்திர நூல்களில் ,ஏனைய விளக்கங்களைக் காணலாம்.

***நித்யம் சுத்தம் நிராபாஸம் நிராகாரம் நிரஞ்ஜனம் ||***
***நித்யபோதம் சிதானந்தம் குரும் பிரம்ம நமாம்யஹம் || 119 ||***

*119.* என்றும் தூய்மையானதும், உருவமற்றதும், பற்றற்றதும், தோன்றாததும், பூரணப் பொருளின் ஞானம் என்றுமுள்ளதும், சிதானந்த சொரூபமாகவும் விளங்கும் குருவை நான் வணங்குகின்றேன்.

***ஸகலபுவனஸ்ருஷ்டி : கல்பிதாசேஷஸ்ருஷ்டிர்-***
***நிகிலநிகமத்ருஷ்டி : ஸத்பதார்த்தைகஸ்ருஷ்டி : /***
***அதத்கணபரமேஷ்டி : ஸத்பதார்த்தைகத்ருஷ்டி:***
***பவகுணபரமேஷ்டிர்மோக்ஷமார்கைகத்ருஷ்டி : || 120 ||***
***ஸகல புவனரங்க ஸ்தாபனாஸ்தம் பயஷ்டி :***
***ஸகருணரஸவ்ருஷ்டிஸ் தத்வமாலா ஸமஷ்டி : /***
***ஸகல ஸமயஸ்ருஷ்டிஸ் ஸச்சிதானந்தத்ருஷ்டி :***
***நிவஸது மயி நித்யம் ஸ்ரீகுரோர் திவ்ய த்ருஷ்டி : || 121 ||***

*120 & 121.* ஸத்குருவின் தெய்வீகப் பார்வை என்மீது யாண்டும் பதிந்திருக்கட்டும். குருவின் திவ்விய திருஷ்டியின் மகத்வம் சொலற்கரியது. அனைத்து சிருஷ்டியும் அதில் அடங்கியுள்ளது. அதன் மீதே இப்படைப்பு யாவும் ஆரோபிக்கப்படுகிறது. சிருஷ்டி அனைத்தும் அதிலேயே அடக்கம். பிரம்மாவும் அவரது படைப்புகளும், தோன்றி மறையும் சம்சாரமும் அதில் அடங்குகிறது. முக்திக்கான ஒரே வழி அது. இத்தனை லோகங்களின் படைப்பாற்றல் அதில் உள்ளது. ஸத்குருவின் கடாட்சம் ஆத்ம ஞானத்தையும், ஸத்சிதானந்தப் பெருநிலையையும் அளிக்கும்.

**ந குரோரதிகம் ந குரோரதிகம்**

**ந குரோரதிகம் ந குரோரதிகம் /**

**சிவசாசனத : சிவசாசனத :**

**சிவசாசனத : சிவசாசனத : // 122 //**

*122.* குருவைவிடப் பெரியது வேறொன்றுமில்லை. குருவை விடப் பெரியது வேறொன்றுமில்லை. குருவைவிடப் பெரியது வேறொன்றுமில்லை. குருவைவிடப் பெரியது வேறொன்றுமில்லை. சிவன் ஆணையாக, சிவன் ஆணையாக, சிவன் ஆணையாக, நான் இதைச் சொல்கின்றேன்.

குறிப்புகள் : இந்த சுலோகத்திலும், இனிவரும் இரு சுலோகங்களிலும் குருவே எல்லாம் என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது. இந்த உண்மையை சீடன் யாண்டும் மனத்தில் இருத்திக்கொள்ள வேண்டும். பிரம்மா, விஷ்ணு, சிவன் பெயர்கள் ஈண்டு குறிப்பிடப்படுவது சீடன் மனத்தில் உள்ள சந்தேகங்கள் அனைத்தையும் போக்குவதற்காகவேயாகும்.

ஒரு பொருளின் உண்மையைப் பற்றி சாதகனின் மனத்தில் சந்தேகம் இருக்குமானால் அவனால் சரியான முறையில் தெளிவு அடைய முடியாது. திரும்பத் திரும்ப உறுதிப்படுத்துவதனாலேயே எல்லா சந்தேகங்களும் தீரும்.

**இதமேவ சிவம் இதமேவ சிவம் இதமேவ சிவம் இதமேவசிவம்**
**ஹரி சாசனதோ ஹரிசாசனதோ ஹரிசாசனதோ**
**ஹரிசாசனத: ॥ 123 ॥**

123. விஷ்ணுவின் ஆணையாக இதுவே சிவம், விஷ்ணுவின் ஆணையாக இதுவே சிவம் (மங்களம்), விஷ்ணுவின் ஆணையாக இதுவே சிவம். விஷ்ணுவின் ஆணையாக இதுவே சிவம்.

**விதிதம் விதிதம் விதிதம் விதிதம்**
**விஜனம் விஜனம் விஜனம் விஜனம் ।**
**விதிசாசனதோ விதிசாசனதோ**
**விதிசாசனதோ விதிசாசனத: ॥ 124 ॥**

124. பிரம்மா ஆணையாக இதுவே மறுக்கமுடியாத ஒரே உண்மை. பிரம்மா ஆணையாக இதுவே மறுக்கமுடியாத ஒரே உண்மை. பிரம்மா ஆணையாக இதுவே மறுக்கமுடியாத ஒரே உண்மை. பிரம்மா ஆணையாக இதுவே மறுக்கமுடியாத ஒரே உண்மை.

**ஏவம்விதம் குரும் த்யாத்வா**
**ஞானம் உத்பத்யதே ஸ்வயம் ।**
**ததா குரூபதேசேன**
**முக்தோஹமிதி பாவயேத் ॥ 125 ॥**

125. இவ்வாறு குருவைத் தியானித்து ஒருவன் உண்மையான ஞானத்தை அடைகிறான். பின்னர் "குருவின் உபதேசத்தில் நான் முக்திப் பேற்றினைப் பெற்றேன்" என்று ஒருவன் திடமாக எண்ண வேண்டும்.

—

குறிப்புகள் : இந்த விதமான தியானம் முக்தியை நல்குகிறது. குருவைத் தியானிப்பதும், '*முக்தோஹம்*' என்ற சூத்திரத்தை ஜபிப்பதும் குருவால் உபதேசிக்கப்பட்ட '*தத்த்வமஸி*' மகாவாக்கியங்களை உணர்ந்து '*அஹம் பிரம்மாஸ்மி*' என்ற அனுபூதியை அடைவதும் ஒன்றாகும். '*தத் த்வம் அஸி*' என்று குரு சொல்கிறார். சிஷ்யன் '*அஹம் பிரம்மாஸ்மி*' என்று உணர்ந்து உறுதிபெறுகிறான். நான்கு மகாவாக்கியங்களில் இது அனுபவ வாக்கியமாகும்.

**குருபதிஷ்டமார்கேண மன : சுத்தி து காரயேத் /**
**அநித்யம் கண்டயேத் ஸர்வம் யத்கிஞ்சித் ஆத்மகோசரம்**
**// 126 //**

***126.*** குருவால் உபதேசிக்கப்பட்ட முறையில் ஒருவன் தன் மனத்தை தூய்மைப்படுத்தவேண்டும். ஆத்ம ஞானத்தைப் பெறுவதுடன் ஒருவன் மற்றதனைத்தையும் பொய் என ஒதுக்க வேண்டும்.

குறிப்புகள் : மனத்தைத் தூய்மைப்படுத்தும் முறையை குரு சிஷ்யனுக்கு கற்றுக்கொடுக்க வேண்டும். எப்பொழுதும் குருவினுடைய உதவி சீடனுக்குத் தேவைப்பட்டாலும் மனதைத் தூய்மைப்படுத்தும் மார்க்கத்தில் அதிகமாகத் தேவைப்படுகிறது. சன்னியாச மார்க்கத்தில் வாழ்ந்து தன் மனத்தைத் தூய்மைப்படுத்தியவர் எவரோ அவரால்தான் மற்றவருக்கு இந்த வகையில் உதவ முடியும். பாதை எது என்பதை வழிகாட்டி அறிந்தால்தான் பிறருக்கு அவரால் உதவ முடியும்.

ஆத்மஞானத்தைப் பற்றிய குருவின் போதனைகளைப் பெற்ற பின்னரும், நிலையற்ற பொருள்களை விடுவதில் சிரமங்கள் நேரிடின், குரு அறிவுறுத்திய பிரகாரம் ஆத்ம

ஞானத்தின் உதவியுடன் எல்லாப் பொய்ப்பொருள் களையும் ஒதுக்கித் தன்னை ஆத்மனுடன் ஒன்றித்து உணர வேண்டும். ஆத்மஸாக்ஷாத்காரம் கிட்டும் வரை பொய்த்தோற்றம் நீடிக்கும்.

**ஜ்ஞேயம் ஸர்வம் ப்ரதீதம் ச ஞானம் ச மன உச்யதே।**
**ஞானம் ஜ்ஞேயம் ஸமம் குர்யான்நான்ய : பந்தா த்விதீயக: ॥127॥**

*127.* எல்லாத் தோற்றங்களும், அறியப்படுபொருள்கள் யாவும் மனத்தின் எல்கைக்குள் வருகின்றன. அறிவும் அறியப்படுபொருளும் ஒரே நிலையில் இருத்தல் வேண்டும். அறிவை அடைய வேறு வழி இல்லை.

குறிப்புகள் : "ஆத்மன் ஒன்றே மெய். மற்றவை அனைத்தும் பொய்" என்பது இதன் பொருள்.

**கிமத்ர பஹு நோக்தேன சாஸ்த்ரகோடி சதைரபி।**
**துர்லபா சித்தவிச்ராந்தி : விநா குருக்ருபாம் பராம் ॥128॥**

*128.* கோடிக்கணக்கான சாஸ்திரங்களைப் பயில்வதால் என்ன பயன்? உண்மையான மன அமைதி பெறுவது மிகக் கடினம். குரு கிருபையின்றி அதை எப்படி பெற முடியும்?

**கருணாகட்கபாதேன சித்வா பாசாஷ்டகம் சிசோ:।**
**ஸம்யகானந்தஜனக : ஸத்குரு : ஸோ அபிதீயதே ॥129॥**

*129.* கருணை என்னும் வாளினால் சிஷ்யனின் எட்டுவிதமான பந்தங்களை அறுத்தெறிந்து சீடனிடம் ஆத்மஞானம் உதயமாகக் காரணமாக எவர் இருக்கிறாரோ அவரே ஸத்குரு.

குறிப்புகள் : ஐயங்கள், இரக்கம், பயம், வெட்கம், பழிச்சொல், சமூக அந்தஸ்து, உயர்குடிப் பிறப்பு, செல்வம் ஆகியவையே எட்டு வகையான பந்தங்கள்.

**ஏவம் ச்ருத்வா மஹாதேவி குருநிந்தாம் கரோதி ய : ।**
**ஸயாதி நரகான் கோரான் யாவச் சந்த்ர திவாகரௌ**
**॥ 130 ॥**

*130.* மஹாதேவி! இவ்வாறாக குருவின் முக்கியத் துவத்தை கேட்டபின்னரும் எவன் குருவை நிந்திக்கிறானோ அவன் மிகவும் கோரமான நரகங்களை அடைந்து சந்திரனும் சூரியனும் இருக்கும் வரை அங்கே உழல்கிறான்.

**யாவத் கல்பாந்தகோ தேஹஸ் காவத்தேவி குரும்ஸ்மரேத் ।**
**குரலோபா நகர்தவ்ய : ஸ்வச்சந்தோ யதி வா பவேத்**
**॥ 131 ॥**

*131.* தேவி! சிருஷ்டி முடியும் வரை உடல் இருந்தாலும் அந்தக் கல்ப கால முடிவு வரை ஒருவன் தனது குருவை நினைத்தல் வேண்டும். ஒருவன் சுதந்திரனாக ஆனாலும் குருவை கைவிடுதல் கூடாது.

**ஹும்காரேண நவக்தவ்யம் ப்ராக்ஞசிஷ்யை : கதாசன ।**
**குரோரக்ர ந வக்தவ்யமஸத்யம் து கதாசன ॥ 132 ॥**

*132.* புத்தியுள்ள சீடன் குருவை ஒருபோதும் அவமதிக்கக் கூடாது. குருவின் முன்னால் ஒருவன் பொய்சொல்லக் கூடாது.

குறிப்புகள் : 'ஹும்' என்று சொல்வது அவமதிப்பைக் காட்டும். குருவின் முன்னால் இத்தகைய வார்த்தைகள் பயன்படுத்தப்படக் கூடாது.

**குரும் த்வம்க்ருத்ய ஹும்க்ருத்ய குருஸாந்நித்ய பாஷண: ।**

**அரண்யே நிர்ஜலே தேசே ஸம்பவேத் பிரம்ம ராக்ஷஸ : ||133||**

*133.* குருவின் முன்னால் அலட்சியமாக 'ஹும்', 'த்வம்' (நீ) என்று சொல்பவன் பாலைவனத்திலோ, காட்டிலோ பிரம்மராக்ஷஸனாகப் பிறப்பான்.

குறிப்புகள் : அரக்கர்களில் ஒருவகை "பிரம்மராக்ஷஸன்."

**அத்வைதம் பாவயேந்நித்யம் ஸர்வாவஸ்தாஸு ஸர்வதா ||**
**கதாசிதபி நோ குர்யாத் த்வைதம் குருஸந்நிதௌ || 134 ||**

*134.* எல்லா நேரத்திலும் எல்லா நிலைமைகளிலும், இருப்பது பிரம்மம் ஒன்றே. நானே பிரம்மம் ' என்ற அத்வைத நிலையில் இருத்தல் வேண்டும். ஆனால் குருவின் முன்னால் இத்தகைய பாவத்தை ஒருபொழுதும் கொள்ளலாகாது.

குறிப்புகள் : ஒருவன் எத்தகைய உயர் அனுபூதி நிலையைப் பெற்றிருந்தாலும் குருவிற்கு உரிய மரியாதையைக் கொடுக்கத் தவறக்கூடாது.

**த்ருச்ய விஸ்மிருதிபர்யந்தம் குர்யாத் குருபதார்ச்சனம் |**
**காத்ருசஸ்யைவ கைவல்யம் நச தத்வ்யதிரேகிண: || 135 ||**

*135.* 'பார்க்கப்படும் பொருள்' காணப்படாதவரை (அதாவது இரண்டு என்பது இல்லாதாகின்றவரை) ஒருவன் ஸத்குருவின் பாதங்களை வணங்க வேண்டும். அத்தகையவர்களுக்கே முக்தி. மற்றவர்களுக்கு அல்ல.

குறிப்புகள் : பரப்பிரம்மனுடன் லயமாகும் வரை மனம், வாக்கு, காயம் என்ற முக்கரணத்தால் ஒருவன் குருவிற்குப் பணிந்து நடக்க வேண்டும். இதுதான் இந்த சுலோகத்தின் கருத்து. குருவிற்குத் தொண்டு செய்வதை விடவே கூடாது.

அபி ஸம்பூர்ண தத்வக்ஞோ குருத்யாகீ பவேத் யதா।
பவத்யேவ ஹி தஸ்யாந்தகாலே விக்ஷேப முத்கடம் ॥ 136 ॥

*136.* ஒருவன் எல்லா சாஸ்திரங்களையும் அறிந்தவனாயிருந்தாலும் கூட, அவன் குருத்யாகியாவா னானால், மரண காலத்தில் பெரும் நாசத்திற்காளாவான்.

குரு கார்யம் நலங்கேத நாப்ருஷ்ட்வா கார்யமாசரேத் ।
நஹ்யுத்திஷ்டேத்திசே அனத்வா குருஸத்பாவசோபிதம் : ॥ 137 ॥

*137.* குருவிற்கான கடமைகளை ஒருவன் ஒருபொழுதும் புறக்கணிக்கக் கூடாது. அவரைக் கேட்காது அவன் எதையும் செய்யக் கூடாது. குருவை வணங்காது ஒருவன் எழுந்திருக்கலாகாது.

குருபக்தி உள்ள ஒருவனிடம் இருக்கவேண்டிய பண்புகள் இவை.

குரோ ஸதி ஸ்வயம் தேவி பரேஷாம் து கதாசன ।
உபதேசம் ந வை குர்யாத் ததா சேத்ராக்ஷஸோ பவேத்
॥ 138 ॥

*138.* குருவின் முன்னிலையில் ஒருவன் மற்றவர்களுக்கு கட்டளைகள் இடலாகாது. அப்படிச் செய்தால் அரக்கனாக அவன் ஆவான்.

ந குரோராச்ரமே குர்யாத் துஷ்பானம் பரிஸமர்ப்பணம் ।
தீக்ஷா வ்யாக்யா ப்ரபுத்வாதி குரோராக்ஞாம் ந காரயேத் ॥139॥

*139.* மதுபானம் அருந்துதல் போன்ற தடை செய்யப்பட்ட காரியங்களை ஒருவன் குருவின் ஆசிரமத்தில் செய்யக் கூடாது. வெட்டிப்பேச்சு, தனது புலமையைக் காண்பிக்கும் பகட்டான பேச்சு அல்லது சீடர்களுக்கு தீட்சை அளித்தல் போன்ற செயல்களை ஒருவன் குருவின் முன்னிலையில் செய்யக் கூடாது.

நோபாச்ரம ச பர்யர்க்கம் ந ச பாதப்ரஸாரணம் |
நாங்க போகாதிகம் குர்யாந்ந லீலாமபராமபி || 140 ||

140. மிக அருகில் அமர்தல், சோபாவில் அமர்தல், காலை நீட்டுதல், காலைப் பிடித்துவிடுதல் போன்ற செய்கைகளை குருவின் முன்னிலையில் ஒருவன் செய்யக் கூடாது.

குரூணாம் ஸதஸத்வாபி யதுக்தம் தந்ந லங்கயேத் |
குர்வந்நாக்ஞாம் திவா ராத்ரௌ தாஸவந்நிவஸேத்குரௌ || 141 ||

141. சரியோ தவறோ குருவின் கட்டளைகளை ஒருவன் ஒருபோதும் மீறக் கூடாது. இரவும் பகலும் அவரது ஆக்ஞைகளை சிரமேற்தாங்கி ஒருவன் சேவகனைப் போல குருவுடன் வாழ வேண்டும்.

அதத்தம் ந குரோர்த்ரவ்யம் உபபுஞ்ஜீத கர்ஹிசித் |
தத்தே ச ரங்கவத்க்ராஹ்யம் ப்ராணோஅப்யேதேன ||142 ||

142. குருவினால் அளிக்கப்படாத செல்வத்தை ஒருவன் ஒருபோதும் அனுபவிக்கக் கூடாது. அவரால் எவை கொடுக்கப்பட்டனவோ அவற்றை ஒருவன் வேலைக் காரனைப் போல அனுபவிக்க வேண்டும். அதன்மூலம் ஒருவன் பெரும் புண்ணியத்தையும் நீண்ட ஆயுளையும் அடைகிறான்.

பாதுகாஸன சய்யாதி குருணா யதபௌஷ்டிதம் |
நமஸ்குர்வீத தத்ஸர்வம் பாதாப்யாம் நஸ்பிருசேத் க்வசித் || 143 ||

143. குருவால் பயன்படுத்தப்பட்ட இருக்கை, செருப்புகள், படுக்கைகள் போன்றவற்றை ஒருவன் காலால்

தீண்டக்கூடாது. மாறாக இவற்றை ஒருவன் பயபக்தியுடன் வணங்க வேண்டும்.

**கச்சத: ப்ருஷ்டதோ கச்சேத் குருச்சாயாம் நலங்கயேத் ।**
**நோல்பணம் தாரயேத்வேஷம்**
***நாலங்காரான்ஸ்ததோல்பணாத் ॥ 144 ॥***

***144.*** குரு நடந்து செல்லும்போது சீடன் அவருக்குப் பின் செல்லவேண்டும். குருவின் நிழலை ஒருபோதும் அவன் கடக்கக்கூடாது. குருவின் உடை, மற்றும் உடைமைகளை அவன் பின்பற்றக்கூடாது.

**குருநிந்தாகரம் த்ருஷ்ட்வா தாவயேதத வாஸயேத் ।**
**ஸ்தானம் வா தத்பரித்யாஜ்யம் ஜிஹ்வாசேதாக்ஷமோ யதி**
***॥ 145 ॥***

***145.*** குருவை நிந்திப்பவனின் நாவினை ஒருவன் அறுக்க முடியவில்லையெனில், தாற்காலிகமாகவோ அல்லது நிரந்தரமாகவோ அவனை விட்டு அகன்றுவிட வேண்டும்.

குறிப்புகள் : குருவை நிந்திப்பவன் முன் ஒருவன் அதைக்கேட்டுக்கொண்டு அமர்ந்திருப்பானாகில், குருவை நிந்தனை செய்பவனின் பாபத்தை இவனும் பகிர்ந்துகொள்கிறான். உண்மையான சீடன் குருநிந்தனை செய்பவனிடமிருந்து வெகுதூரம் அகன்று சென்று விடவேண்டும்.

***நோச்சிஷ்டம் கஸ்யசித்தேயம் குரோராக்ஞாம் நசத்யஜேத் ।***
***க்ருத்ஸ்ன முச்சிஷ்டமாதாய ஹவிர்வத்பக்ஷயேத் ஸ்வயம்***
***॥ 146 ॥***

***146.*** ஒருவன் குருவின் கட்டளைகளை ஒருபோதும் மீறக்கூடாது. குரு உண்டபின் தட்டில் எஞ்சியவற்றை ஒருவன் பிறருடன் பகிர்ந்து கொள்ளக்கூடாது. பெரும்

யாகத்தில் எஞ்சியவற்றைப் போலக் கருதி ஒருவன் குரு சாப்பிட்டபின் எஞ்சிய மீதி உணவை பக்தியுடன் உண்ண வேண்டும்.

**நாந்ருதம் நாப்ரியம் சைவ நகர்வம் நாபி வா பஹு |**
**நநியோகதரம் ப்ரூயாத் குரோராக்ஞாம் விபாவயேத்**
**|| 147 ||**

*147.* குருவிடம் பொய்யோ அல்லது அவருக்குப் பிடிக்காததையோ சொல்லக்கூடாது. ஆணவத்துடன் பேசக்கூடாது. குருவின் முன் அதிகம் பேசக்கூடாது. குருவுடன் அதிகாரத்தொனியில் பேசக்கூடாது. குருவின் கட்டளைகளை பக்தியுடன் பணிய வேண்டும்.

**ப்ரபோ தேவ குலேசானாம் ஸ்வாமின் ராஜன் குலேச்வர |**
**இதி ஸம் போதனைர்பீதோ ஸச்சரேத் குரு ஸந்நிதௌ**
**|| 148 ||**

*148.* தேவே, இறைவா! மனிதருள் மாணிக்கமே, அரசே - இவ்விதம் ஒருவன் பயபக்தியுடன் குருவை அழைக்க வேண்டும். குருவின் முன்னிலையில் அவன் பயத்துடனும், பக்தியுடனும் நடந்துகொள்ள வேண்டும்.

குறிப்புகள் : '*குரு பாவேன ஸர்வதா*' என்றும் இந்த சுலோகத்தின் இறுதிப் பகுதி படிக்கப்படுகிறது. குருவை குரு என்று கருதி எப்பொழுதும் அவரை மதிப்புடன் அழைக்க வேண்டும் என்பது இதன் பொருள்.

**முனிபி : பன்னகைர்வாபி ஸுரைர்வா சாபிதோ யதி |**
**காலம்ருத்யு பயாத்வாபி குரு : ஸந்த்ராதி பார்வதி || 149 ||**

*149.* முனிகளாலும் தேவர்களாலும் சபிக்கப் பட்டாலோ, பாம்புகள் மற்றும் காலனின் பயத்திற் காளானாலோ, பார்வதி ! குருவே காப்பாற்றுபவர் ஆகிறார்.

***அசக்தாஹி ஸுராத்யாஸ்ச ஹ்யசக்தா முனயஸ்ததா |***
***குருசாபோபன்னஸ்ய ரக்ஷணாய சகுத்ரசித் || 150 ||***

*150.* குருவினால் சபிக்கப்பட்டவனை தேவர்களாலும், முனிவர்களாலும் கூடக் காப்பாற்ற முடியாது.

குறிப்புகள் : எந்த நிலைமையிலும் ஒருவன் குருவின் அதிருப்திக்கு ஆளாகக் கூடாது.

***மந்த்ரராஜமிதம் தேவி குருரித்யக்ஷரத்வயம் |***
***ஸ்மிருதி வேத புராணானாம் ஸாரமேவ ந சம்சய : || 151 ||***

*151.* சிவபெருமான் பார்வதியிடம் சொல்கிறார். "தேவி! இரண்டெழுத்து வார்த்தையான 'குரு' மந்திரங்களுள் மிகச் சிறந்ததாகும். வேதங்கள், ஸ்மிருதிகள் மற்றும் புராணங்களின் சாரம் அது.

***ஸத்காரமான பூஜார்த்தம் தண்டகாஷாய தாரண : |***
***ஸ ஸந்யாஸீ ந வக்தவ்ய : ஸந்யாஸீ ஞானதத்பர : || 152 ||***

*152.* காஷாய உடையையும் தண்டத்தையும் மதிப்பு, மரியாதை மற்றும் நமஸ்காரத்தைப் பெறுவதற்காக எவன் அணிகின்றானோ அவன் சன்யாசி என அழைக்கப்படமாட்டான். ஆத்ம ஞானத்தில் நாட்டம் உள்ளவனே சன்யாசி.

குறிப்புகள் : முதல் வரி மட்டும் மாறாத மற்றொரு வாசகமும் இந்த சுலோகத்திற்கு உண்டு. மாற்றம் உள்ள வரி கீழ்க்காணும் விதத்தில் உள்ளது: *"குரு சப்ததரோ நர: ஸயாதி நரகான் தேவி நாஸ்தி ஸந்தேஹமன்வபி"* எவனொருவன் மதிப்பிற்கும் மரியாதைக்கும் வேண்டி தன்னை குரு என்று சொல்லிக்கொள்கிறானோ அவன் நரகத்திற்குப் போகிறான். இதில் ஐயமே இல்லை" என்பது இதன் பொருள்.

அறியாத எளிய மக்களை ஏமாற்றும் வித்தையே இது. உண்மையான மனிதன் இப்படிச் செய்யமாட்டான். இப்படிச் செய்தால் இவ்வுலகில் வீண்பழிக்கும், மரணத்திற்குப் பின் நரகத்திற்கும் அவன் ஆளாகிறான்.

**விஜானந்தி மஹாவாக்யம் குரோஸ்சரணஸேவயா**
**தே வை ஸன்யாஸின : ப்ரோக்தா இதரே வேஷதாரிண :**

**|| 153 ||**

*153.* குருவிற்குத் தொண்டு செய்து எவர்கள் மஹாவாக்கியங்களின் உட்பொருளை உணர்கின்றார்கள ளோ அவர்களே உண்மை ஸன்யாஸிகள். ஏனையோர் வெறும் காவி உடை தரித்தவர்களேயாவர்.

**நித்யம் பிரஹ்ம நிராகாரம் நிர்குணம் ஸத்யசித்கனம் |**
**ய : ஸாக்ஷாத்குருதே லோகே குருத்வம் தஸ்யசோபதே**

**|| 154 ||**

*154.* ஈண்டு எவர் ஸத்தியம், பூரண அறிவுடன் கூடியதும், குணம் உருவம் அற்றதுமான பிரம்மத்தை யாண்டும் உணர்கின்றாரோ அவரது குருஸ்தானம் உலகில் சோபிக்கிறது.

*'நித்யம் பிரம்ம நிராகாரம் நிர்குணம் போதயேத் பரம்*
*பாஸயன் பிரம்மபாவம் ச தீபோ தீபாந்தரம் யதா |"*

என்பது இந்த சுலோகத்தின் வேறொரு வாசகம். உருவம், குணம் கடந்த நித்தியப் பொருளான பிரம்மத்தை எவன் உணர்கின்றானோ அவன் தன்னைத்தானே பிறிதோர் விளக்கின் துணையின்றி விளக்கிக்கொள்ளும் விளக்கைப் போல ஒளிர்கிறான்.

**குருப்ரஸாதத: ஸ்வாத்மன் யாத்மா ராம நிரீக்ஷணாத் |**
**ஸமதா முக்திமார்கேண ஸ்வாத்மஞானம் ப்ரவர்ததே**

**|| 155 ||**

*155.* முக்தி மார்க்கத்தில் உறுதியாயிருப்பதனாலும், தன்னில் தன்னையே காண்பதாலும், அகத்தே ஆத்மசோதனை செய்வதனாலும், குருவின் அருளினாலும் சாதகனிடம் ஆத்மஞானம் தோன்றுகிறது.

***ஆப்ரஹ்மஸ்தம்பபர்யந்தம் பரமாத்மஸ்வரூபகம் /***
***ஸ்தாவரம் ஜங்கமம் சைவ ப்ரணமாமி ஜகன் மயம் // 156 //***

*156.* பிரம்மன் முதல் தூண் வரை இங்கு அனைத்தும் பரமாத்மாவின் சொரூபமே. உலகனைத்தும் அசையும் பொருள்கள். அசையாப் பொருள்கள் யாவும் பரமாத்ம சொரூபமே என்றுணர்ந்து நான் அவற்றை வணங்கு கிறேன்.

***வந்தேஹம் ஸத் சிதானந்தம் பாவாதீதம் ஜகத் குரும் /***
***நித்யம் பூர்ணம் நிராகாரம் நிர்குணம் ஸ்வாத்மஸம்ஸ்திதம் // 157 //***

*157.* பல்வேறு நிலைகளுக்கு அப்பாற்பட்டவரும், நித்தியமாகவும், பூர்ணமாகவும், தோற்றமில்லாதவரும், குணமற்றவரும், யாண்டும் ஆத்மனில் நிலை பெற்றவரும் சத்சிதானந்த ரூபியாக விளங்கும் அந்த ஜகத்குருவை நான் வணங்குகின்றேன்.

***பராத்பரதரம் த்யாயேன் நித்யமானந்த காரகம் /***
***ஹ்ரதயாகாச மத்யஸ்தம் சுத்தஸ்படிக ஸந்நிபம் // 158 //***

*158.* எதற்கு அப்பால் எதுவும் இல்லையோ, அனைவர் மீதும் யாண்டும் எது ஆனந்தத்தை நல்குகிறதோ, இதயத்தில் எது குடி கொண்டுள்ளதோ, ஸ்படிகம் போல எது ஒளிர்கிறதோ அந்தப் பரம்பொருளை ஒருவன் தியானிக்க வேண்டும்.

***ஸ்பாடிகே ஸ்பாடிகம் ரூபம் தர்பணேதர்பணோ யதா /***

**ததாத்மனி சிதாகார மானந்தம் ஸோஹமித்யுத் // 159 //**

*159.* ஒரு ஸ்படிகம் எவ்விதம் ஒரு ஸ்படிகத்தில் ஒளிர்கிறதோ, ஒரு கண்ணாடியில் மற்றொருகண்ணாடி ஒளிர்வதைப்போல, ஆத்மனில் சிதாகாச ஆனந்தம் ஒளிர்கிறது. 'ஸோஹம்' (அதுவே நான்) என்பது அனைத்து ஐயங்களுக்கும் அப்பாற்பட்டது.

**அங்குஷ்டமாத்ரம் புருஷம் த்யாயேச்ச சின்மயம் ஹ்ருதி /**
**தத்ர ஸ்புரதி யோ பாவ : ச்ருணு தத்கதயாமிதே // 160 //**

*160.* "கட்டை விரலுக்குகொப்ப அளவுள்ள புருஷன் இதயத்தில் சின்மயமாக தியானிக்கப்படுகையில் இதயத்தில் எழும் பாவத்தை (உணர்வை) பார்வதி, உனக்கு நான் சொல்லுகிறேன்,'' என்று சிவபெருமான் பார்வதியிடம் கூறுகிறார்.

குறிப்புகள் : ' பாவம்' என்பது உணர்வு நிலையாகும். சின்மயம் என்பது எங்கும் நிறை ஞானமும் ஒளியுமாகும்.

**அஜோஹம்அமரோஹம் ச ஹ்யனாதி நிதனோ ஹ்யயம் /**
**அவிகாரஸ்சிதானந்தோ ஹ்யணீயான் மஹதோ மஹான்**
**// 161 //**

*161.* "நான் பிறவாதவன். அழியாதவன். ஆரம்பமில்லாதவன். முடிவற்றவன். குணமற்றவன். நான் உணர்வு மயமானவன். ஆனந்த சொரூபி. சிறியதிலும் சிறியவன். பெரியதிலும் பெரியவன்".

**அபூர்வ மபரம் நித்யம் ஸ்வயம் ஜ்யோதிர்நிராமயம் /**
**விரஜம் பரமாகாசம் த்ருவமானந்த மவ்யயம் // 162 //**

*162.* எனக்கு முந்தியவனோ பிந்தியவனோ எவரும் கிடையாது. நான் சாசுவதமானவன். என்றும் தூய்மையானவன். ஸ்வயம்ஜோதியானவன். துக்கமும்

வியாதியுமற்றவன். சிறிதும் அசைவில்லாதவன். ஆனந்தவடிவானவன்.

**அகோசரம் ததாஅகம்யம் நாமரூபவிவர்ஜிதம் |**
**நி:சப்தம் து விஜானீயாத்ஸ்வபாவாத் ப்ரஹ்ம பார்வதி**
**|| 163 ||**

*163.* ''பார்வதி! நான் கட்புலனாகாதவன். வாக்காலும் மனத்தாலும் அடையப்பட முடியாதவன். பெயர் உருவம் அற்றவன். நேரடியாக எழுத்தாலும் பேச்சாலும் விவரிக்கப்பட முடியாதவன். என்னை இவ்விதம் அறிவாயாக''. ஏனெனில் இதுவே எனது இயற்கை நிலை.

குறிப்புகள்: *161, 162, 163* சுலோகங்கள் ஆத்மனில் தியானம் செய்யும் முறையை நமக்குத் தருகின்றன. ஏனெனில் ஆத்மன் ஒரு பொருளாக எப்பொழுதும் இருக்கமுடியாது. அதனால் மனம், வாக்கால் அது நேரடியாக 'இது' என்று விளக்கப்படமுடியாதது. அது 'நான்' எனும் ஆத்மாவாக 'அது' என்றே உணரப்படும். நானே பிரம்மன். அஹம் பிரம்மாஸ்மி. ஸோஹம். ஓம். வேறு வழி கிடையாது.

**யதா கந்தஸ்வபாவத்வம் கர்பூரகுஸுமாதிஷு |**
**சீதோஷ்ணத்வஸ்வபாவத்வம் ததா பிரஹ்மணி சாச்வதம்**
**|| 164 ||**

*164.* எவ்விதம் கற்பூரம், மற்றும் பூக்களில் மணம் இயற்கையாக இருக்கிறதோ, தீயினிடத்து சூடும், பனிக்கட்டியில் குளிர்ச்சியும் இயற்கையாக உள்ளனவோ அதுபோல பிரம்மனில் சாச்வதத் தன்மை இயற்கையானது. (பிரம்மன் சாசுவதமானது, நிலையானது).

**யதா நிஜஸ்வாபாவேன குண்டலகடகாதய: |**

***ஸுவர்ணத்வேன திஷ்டந்தி ததாஹம் பிரம்ம சாச்வதம் || 165 ||***

*165.* குண்டலம் மற்றும் வளையல் போன்ற தங்க நகைகளில் எவ்வாறு தங்கம் இயற்கைத் தன்மையுடன் இருக்கிறதோ அது போல நான் என்றும் நிலையான பிரம்மன்.

***ஸ்வயம் ததாவிதோ பூத்வா ஸ்தாதவ்யம் யத்ரகுத்ரசித் /***
***கீடோ ப்ருங்க இவ த்யானாத்யதா பவதி தாத்ருச: || 166 ||***

*166.* புழு ஒன்று கருவண்டினிடம் உள்ள இடைவிடாத பயம் காரணமாக தானே இறுதியில் கருவண்டாக மாறி அமைவது போல, எங்காவது பிரம்மனில் இடையறாத தியானம் செய்தவன். மூலம் பிரம்மனாகவே ஆக வேண்டும்.

***குருத்யானம் ததா க்ருத்வா ஸ்வயம் ப்ரம்மமயோ பவேத் /***
***பிண்டே பதே ததாரூபே முக்தாஸ்தே நாத்ர சம்சய: || 167 ||***

*167.* குருவை தியானம் செய்து பிரம்மானுபூதியை அடைந்து இந்த உடலுடன் இருக்கும்பொழுதே மிக உயர்ந்த முக்திநிலையை அடைய வேண்டும். இத்தகையவனே முக்த புருஷன். இதில் வேறு எந்த ஐயமும் கிடையாது.

*ஸ்ரீ பார்வதி உவாச:*

***பிண்டம் கிம் து மஹாதேவ பதம் கிம் ஸமுதாஹ்ருதம் /***
***ரூபாதீதம் ச ரூபம் கிம் ஏததாக்யா ஹி சங்கர || 168 ||***

*168.* ''மஹாதேவனே! சங்கரனே! பிண்டம், பதம், ரூபம், ரூபாதீதம் ஆகியவை எவை என்று எனக்கு இயம்புவீராக''

*ஸ்ரீமஹாதேவ உவாச:*

பிண்டம் குண்டலினீ சக்தி: பதம் ஹம்ஸமுதாஹ்ரதம் ।
ரூபம் பிந்துரிதி ஞேயம் ரூபாதீதம் நிரஞ்ஜனம் ॥ 169 ॥

169. பிண்டம் என்பது குண்டலினி சக்தி. பதம் ஹம்ஸம். ரூபம் பிந்து. ரூபாதீதம் என்பது ஒப்புமையற்ற (நிரஞ்ஜன) நிலை

குறிப்புகள்: ஆறு சக்கரங்களில் முதலாவதான மூலாதார சக்கரத்தில் சுருண்டு கிடக்கும் மூல சக்தியே குண்டலினியாகும். இது குதத்திற்கருகில் உள்ளது. ஹம்ஸம் என்பது ஜீவாத்மாவைக் குறிக்கிறது. ரூபம் என்பது துரீய நிலை. துரீயாதீதமே ரூபாதீதம்.

பிண்டே முக்தா: பதே முக்தா: ரூபே முக்தா வரானனே ।
ரூபாதீதே து யே முக்தாஸ்தே முக்தா நாத்ர சம்சய: ॥ 170 ॥

170. பிண்டத்தில் விடுபட்டவர்களே உண்மையில் விடுதலை பெற்றவர்கள். அவர்கள் பதத்திலிருந்தும், ரூபத்திலிருந்தும் விடுதலை பெற்றவர்கள். ரூபாதீதத் திலிருந்தும் விடுதலை பெற்றவர்களே உண்மையில் முக்தர்கள். பார்வதி, இதில் சந்தேகமில்லை.

குறிப்புகள்: நாம ரூபங்களுக்கு அப்பாற்பட்ட ரூபாதீதம் பெறற்கரிய பெருநிலையாகும். இங்கு எல்லா வாசனைகளும், கர்மங்களும் பொசுங்கிப் போகின்றன. எல்லா வகையான முக்தியும் மெய்யே, பெருநிலைக்கு இட்டுச் செல்லவல்லவை என்பதை இந்த சுலோகம் தெரிவிக்கிறது. படிப்படியான முன்னேற்றம் இறுதி முக்திக்கு வழிகோலுகிறது. இத்தகைய பலநிலைகளிலிருந்து கீழே போவதே கிடையாது.

குரோர்த்யானேனைவ நித்யம் தேஹீ ப்ரம்மமயோ பவேத் ।
ஸ்திதஸ்ச யத்ர குத்ராபி முக்தோ அஸௌ நாத்ர ஸம்சய :
॥ 171 ॥

171. குருவை இடையறாது தியானிப்பதன் மூலமே உடல் கொண்ட ஒருவன் உடல் அற்ற பிரம்மமாக ஆகின்றான். அவன் எங்கிருந்தாலும் முக்த புருஷனே. இதில் சந்தேகமே கிடையாது.

குறிப்புகள்: 'த்யானேனைவ' என்ற வார்த்தை குருவைத் தியானிப்பவனுக்கு வேறு எந்த வகை தியானமோ அல்லது அவனது முக்திக்கு உதவும் வேறு ஏதாவது தியானப் பொருளோ தேவையில்லை என்பதைக் குறிக்கிறது.

**ஞானம் ஸ்வானுபவ: சாந்திர் வைராக்யம் வக்க்ருதா த்ருதி: |**
**ஷட்குணைச்வர்ய யுக்தோ ஹி பகவான் ஸ்ரீகுரு: ப்ரியே || 172 ||**

172. எனதருமை பார்வதி! ஆத்மஞானம், ஆத்மானுபூதி, அமைதி, வைராக்கியம், சொல்லாற்றல், தைரியம் இந்த ஆறு குணங்களும் உடையவர் எவரோ அவரே பகவானான குரு.

குறிப்புகள்: இந்த சுலோகத்தின் முதல் வரி ''ஞானம் வைராக்யம் ஐச்வர்யம் யச: ஸ்ரீ ஸமுதாஹ்ரதம்'' என்றும் சொல்லப்படுகிறது. குருபகவானுக்கு உள்ள ஆறு குணங்கள் அறிவு, வைராக்யம், தலைமை, புகழ், செல்வம், தைரியம் ஆகியவையே என்பது இதன் பொருள்.

**குரு: சிவோ குருர் தேவோ குருர் பந்து: சரீரிணாம் |**
**குருராத்மா குருர்ஜீவோ குரோரந்யந்த வித்யதே || 173 ||**

173. குருவே சிவன். குருவே கடவுள். அனைத்துயிருக்கும் குருவே உற்றார். குருவே ஆத்மன். குருவே ஜீவன். குருவைத் தவிரவேறு எதுவும் கிடையாது.

**ஏகாகீ நிஸ்ப்ருஹ: சாந்தஸ்சிந்தாஸூயாதி வர்ஜித: |**

பால்ய பாவேன யோ பாதி ப்ரம்மஞானீ ஸ உச்யதே
|| 174 ||

174. தனித்தும், ஆசையற்றும், அமைதியாகவும், பொறாமை, பேராசை முதலியவற்றிலிருந்து தவிர்த்தும் எவர் உண்மையில் விளங்குகிறாரோ அவரே பிரம்மஞானி.

குறிப்புகள்: பால்யபாவம் என்பது ஒரு துறவியின் ஞான நிலையைக் குறிக்கிறது. பால்யம், மௌனம், பாண்டித்யம் என்பவை தன்னையுணர்ந்த முனிவனின் நிலைகளாகும். எளிமையில் அவர் குழந்தையைப் போன்றவர். தேவைப்படும்போது மட்டுமே பேசும் அவர் மௌனியாகக் காட்சி தருகிறார். நன்கு கற்றவர் அவர். ஐயங்கள் அற்றவர் அவர்.

நஸுகம் வேதசாஸ்த்ரேஷு ந ஸுகம் மந்த்ரயந்த்ரகே |
குரோ: ப்ரஸாதாதன்யத்ர ஸுகம் நாஸ்தி மஹீதலே ||175||

175. குருப்ரஸாதம் எனும் குருவின் கருணையிலன்றி வேதங்கள், சாஸ்திரங்கள், மந்திரங்கள், தந்திரங்கள் போன்ற எதிலும் இன்பம் கிடையாது.

குறிப்புகள்: குரு அல்லது இறைவனுக்கு படைக்கப்பட்ட உணவின் மிச்சம் என்பதையே பொதுவாக ப்ரஸாதம் என்ற வார்த்தை குறிக்கிறது. ஆன்மீக நோக்கில் '*மோக்ஷமூலம் குரோ:க்ருபா*' என்ற வாக்கியத்திற்கேற்ப குருவின் க்ருபையே மோட்சத்திற்கு வழி வகுக்கிறது. வெறும் உணவின் மிச்சத்தை (உச்சிஷ்டம்) இது குறிக்கிறது.

சார்வாக வைஷ்ணவமதே ஸுகம் ப்ராபாகரே ந ஹி |
குரோ: பாதாந்திகே யத்வத்ஸுகம் வேதாந்த ஸம்மதம்
|| 176 ||

176. சார்வாகர்கள், வைஷ்ணவர்கள் மற்றும் ப்ராபாகர்கள் ஆகியோரது தத்துவத்தில் உண்மையான இன்பம் கிடையாது. குருவின் பாதத்தில் காணப்படும் இன்பம் வேறு எங்கும் கிடையாது. வேதாந்தத்தில் ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மை இது.

குறிப்புகள்: உடலையே வழிபடு பொருளாகக் கொண்டு, 'உண்டு குடித்து மகிழ்க' என்று கூறுபவர்கள் சார்வாகர்கள் ஆவார்கள். வைஷ்ணவர்கள் விஷ்ணுவை வழிபடுபவர்கள். குமாரிலபட்டரால் உருவாக்கப்பட்ட மீமாம்ஸ தத்துவத்தைக் கடைப்பிடிப்பவர்கள் ப்ராபாகரர்கள். இந்திய ஷட்தர்சனத்தின் ஒரு பகுதி இது.

**நதத்ஸுகம் ஸுரேந்த்ரஸ்ய நஸுகம் சக்ரவர்த்தினாம் |**
**யத்ஸுகம் வீதராகஸ்ய முனேரேகாந்த வாஸின: || 177 ||**

177. எந்தவிதப் பற்றுதலும் இன்றி தனிமையில் வசிக்கும் துறவி ஒருவர் அடையும் ஆனந்தத்திற்கீடாக தேவர்களின் தலைவனான இந்திரனோ அல்லது சக்கரவர்த்தியோ கூட அடையமுடியாது.

குறிப்புகள்: ஆன்மானுபூதி அடைந்த துறவி அடையும் ஆனந்தத்தை தேவர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள் கூட அடைய முடியாது என்று தைத்திரீய உபநிஷதத்தில் பிரம்மாண்ட வல்லியில் சொல்லப்படுகின்ற கருத்து இந்த சுலோகத்தில் பிரதிபலிக்கிறது.

**நித்யம் பிரம்மரஸம் பீத்வா த்ருப்தோ ய: பரமாத்மனி |**
**இந்த்ரம் ச மன்யதே துச்சம் ந்ருபாணாம் தத்ர கா கதா |178||**

178. பிரம்மரஸத்தை அருந்தி பரமாத்மனில் திருப்தி அடைந்த முனிவர்கள் இந்திரனையே துரும்பென மதிக்கையில், மற்ற அரசர்களைப் பற்றிச் சொல்வானேன்!

குறிப்புகள்: இரண்டாவது வரியில் 'துச்சம்' என்பதற்குப் பதிலாக 'ரங்கம்' என்றும் மற்றொரு வாசகம் உள்ளது.

*யத: பரமகைவல்யம் குருர்மார்கேண வை பவேத் I*
*குரு பக்திரத: கார்யா ஸர்வதா மோக்ஷகாங்க்ஷிபி: II179II*

*179.* முக்தியை நாடுபவர்கள் யாண்டும் குருபக்தியை வளர்க்க வேண்டும். ஏனெனில் குருவின் வழியைக் கடைப்பிடிப்பதால் ஒருவன் மேலான மங்களத்தையும் கைவல்ய நிலையையும் அடைகிறான்.

*ஏக ஏவாத்விதீயோஹம் குருவாக்யேன நிஸ்சித: I*
*ஏவமப்யஸ்யதா நித்யம் ந ஸேவ்யம் வை வனாந்தரம்*
*II 180 II*

*180.* குருவின் உபதேசத்திற்கிணங்க உறுதியுடன், ''நான் இரண்டற்ற ஒன்றே'' என்று எவன் இடையறாத தியானம் பயில்கிறானோ, அவன் தவத்திற்காக காடு செல்லவேண்டியதில்லை (இதுவே தபத்திற்கீடானது).

*அப்யாஸான்நிமிஷேணைவ ஸமாதி மதிகச்சதி I*
*ஆஜன்மஜனிதம் பாபம் தத்க்ஷணாதேவ நச்யதி II 181 II*

*181.* கண்மூடித் திறக்கும் காலத்திற்குக் கூட பயிற்சி செய்தால் ஒருவன் ஸமாதி நிலையை அடையலாம். பிறந்தது முதல் சேர்ந்துள்ள பாபங்கள் அனைத்தும் உடனே நசித்துப்போகும்.

*கிமாவாஹனமவ்யக்தை வ்யாபகம் கிம் விஸர்ஜனம் I*
*அமூர்த்தௌ ச கதம் பூஜா கதம் த்யானம் நிராமயே II182II*

*182.* குற்றமற்ற பார்வதியே! தோன்றாப் பொருளை ஒருவன் தியானிப்பது எப்படி? எங்கும் நிறைந்த ஒன்றை எங்கே எப்படி ஒருவன் மீட்டு வைப்பது? (விஸர்ஜனம்

செய்வது) உருவமில்லாத ஒன்றை எப்படி ஒருவன் பிரார்த்திப்பது?

குறிப்புகள்: இந்தப் பிரார்த்தனை முறைகள் யாவும் உருவத்துடன் கூடிய தேவதைகளுக்கேயாகும். நிர்குணப் பிரம்மத்தை கோவில்களில் நாம் வழிபடுவது போல வழிபட முடியாது.

**குருர்விஷ்ணு: ஸத்வமயோ ராஜஸஸ்சதுரானன: |**
**தாமஸோ ருத்ரரூபேண ஸ்ருஜத்யவ தி ஹந்திச || 183 ||**

183. ராஜஸிக பிரம்மனைப் போல குரு இவ்வுலகைப் படைக்கிறார். ஸாத்விக விஷ்ணுவைப் போல அவர் அதைக் காக்கிறார். தாமஸிக ருத்திரனைப் போல அவர் உலகை அழிக்கிறார்.

**ஸ்வயம் ப்ரம்மமயோ பூத்வா தத்பரம் நாவலோகயேத் |**
**பராத்பரதரம் நான்யத் ஸர்வகம்ச நிராமயம் || 184 ||**

184. தானே பிரம்மமயமாக ஆக ஒருவன் எங்கும் நிறைந்த மேலான பராத்பரமான தத்துவத்தைக் காண வேண்டும். அதைத் தவிர வேறு எதையும் காணலாகாது. (பராத்பரம் அனைத்தையும் கடந்தது)

**தஸ்யாவலோகனம் ப்ராப்ய ஸர்வஸங்க விவர்ஜிதம் |**
**ஏகாகீ நிஸ்பிருஹ: சாந்த: ஸ்தாதவ்யம் தத்ப்ரஸாதத : || 185 ||**

185. அந்த பரம்பொருளின் ஒரு சிறு காட்சியைக் கண்டபின் ஒருவன் அனைத்துப் பற்றுதல்களினின்றும் விடுபட்டவனாக, பற்றற்று அமைதியுடன் அதனருளால் தனித்து வாழ வேண்டும்.

**லப்தம் வாஅத ந லப்தம் வா ஸ்வல்பம் வா பஹுலம் ததா |**

நிஷ்காமேனைவ போக்தவ்யம் ஸதா ஸந்துஷ்டமானஸ:
//186//

186. ஒருவன் சிறிய அளவிலோ அல்லது பெரிய அளவிலோ ஒன்றைப் பெற்றாலும் சரி, பெறாவிட்டாலும் சரி, ஒருவன் பொருள்களை நிறைந்த மனதுடன் அனுபவிக்க வேண்டும்.

ஸர்வக்ஞபதமித்யாஹுர்தேஹீ ஸர்வமயோ புவி /
ஸதா ஆனந்த: ஸதாசாந்தோ ரமதே யத்ர குத்ரசித் //187//

187. இவ்வுலகில் ஸர்வமயமாக (எல்லாமாகவும் முழுதாகவும்) ஆகி ஒருவன் எங்கும் ஆனந்தமாகவும் அமைதியுடனும் வசிக்கிறான். இதுவே 'ஸர்வக்ஞ பதம்' எனப்படுகிறது.

குறிப்புகள்: எங்கும் நிறைந்த ஆத்மா யாண்டும் 'தன்மை'யாகவும், மற்ற அனைத்தும் அதற்குப் 'படர்க்கை'யாகவும் தோன்றுகிறது.

யத்ரைவ திஷ்டதே ஸோபி ஸதேச: புண்யபாஜந: /
முக்தஸ்ய லக்ஷணம் தேவி தவாக்ரே கதிதம் மயா //188//

188. எங்கெல்லாம் அந்த முக்த புருஷன் வசிக்கிறானோ அந்த தேசம் புனிதமானது. அனைத்து நலன்களையும் அது பெறுகிறது. இவ்விதம் ஓ தேவி! முக்த புருஷனின் பெருமை என்னால் உரைக்கப்பட்டது.

உபதேசஸ்த்வயம் தேவி குருமார்கேண முக்தித: /
குருபக்திஸ்ததாத்யந்தா கர்த்தவ்யா வை மனீஷிபி: / 189 //

189. தேவி! குருமார்க்கத்தில் முக்தியை நல்கவல்ல அறிவுரை இதுதான். எனவே அனைவராலும் பக்தி சிரத்தையுடன் குருபக்தி அனுஷ்டிக்கப்பட வேண்டும்.

நித்யயுக்தாச்ரய: ஸர்வோ வேதக்ருத்ஸர்வவேதக்ருத் /

ஸ்வபரஞானதாதா ச தம் வந்தே குருமீச்வரம் // 190 //

*190.* எப்பொழுதும் சுதந்திரராகவும், அனைத்திற்கும் ஆதாரமாயுள்ளவரும், வேதங்களுக்கு ஆதாரமாயுள்ளவரும், அனைத்துவேதங்களுக்கும் ஆதாரமாயுள்ளவரும், அனைவருக்கும் ஞானத்தை நல்குபவருமாகிய கடவுளின் உருவான குருவை நான் வணங்குகிறேன்.

யத்யப்யதீதா நிகமா: ஷடங்கா: அகமா: ப்ரியே /
அத்யாத்மாதீனி சாஸ்த்ராணி ஞானம் நாஸ்தி குரும் வினா
191 //

*191.* அன்புக்குரிய பார்வதி! ஒருவன் நான்கு வேதங்களையும், சிக்ஷை, கல்பம், வ்யாகரணம், நிருக்தம், ஜோதிஷம், சந்தஸ் எனும் அறுவகை ஆகமங்களையும், எல்லா அத்யாத்ம சாஸ்திரங்களையும் கற்றிருக்கலாம். ஆனாலும் குருவின்றி அவனால் ஞானத்தைப் பெற இயலாது.

சிவபூஜாரதோ வாபி விஷ்ணுபூஜாரதோ அதவா /
குருதத்வ விஹீனச்சேதத்ஸர்வம் வ்யர்த்தமேவ ஹி //192//

*192.* ஒருவன் சிவபூஜை செய்யலாம் அல்லது விஷ்ணு பூஜை செய்யலாம். எனினும் குருதத்துவம் பற்றிய ஞானம் அவனுக்கு இன்றேல் அவனது கல்வி அனைத்தும் வீணே.

சிவஸ்வரூபமக்ஞாத்வா சிவபூஜா க்ருதா யதி /
ஸா பூஜா நாமமாத்ரம் ஸ்யாச்சித்ரதீப இவ ப்ரியே //193//

*193.* சிவனது உண்மைச் சொருபத்தை அறியாமல் சிவபூஜை செய்யப்பட்டால் அந்த வழிபாடு வெறும் பெயரளவு வழிபாடேயாகும். எனதன்பு பார்வதி! அந்த வழிபாடு வெறும் காகிதத்தில் எழுதிய விளக்கினை ஒக்கும்.

குறிப்புகள்: காகிதத்தில் வரையப்பட்ட விளக்கு எவ்விதம் இருட்டு அறையில் உள்ள இருட்டினைப் போக்காதோ, அதுபோலவே இறைவனது உண்மை சொரூபத்தை அறியாது செய்யப்படும் வழிபாடு பலனளிக்காது. உண்மைப் பக்தர்களின் வழிபாடு இங்கு சொல்லப்படவில்லை. வெறும் வெளிவேஷத்திற்காகச் செய்யப்படும் போலி வழிபாடே இங்கே பேசப்படுகிறது. இறைவனை உணர பூஜை செய்வது மிகவும் முக்கியம். ஒருவன் சிரத்தையுடனும் பக்தியுடனும் பூஜை செய்ய வேண்டும் என்பதுவே கருத்து.

**ஸர்வம் ஸ்யாத்ஸபலம் கர்ம குருதீக்ஷா ப்ரபாவத: I**
**குருலாபாத்ஸர்வலாபோ குருஹீனஸ்து பாலிச: II 194 II**

*194.* குருதீக்ஷையின் மகிமையினாலும் பிரபாவத்தாலும் உங்கள் எல்லா செயல்களும் பலனளிக்கும். குருவை அடைவதால் ஒருவன் அனைத்தையும் அடைகிறான். குரு இன்றி ஒருவன் வெறும் மூடனே.

**குருஹீன: பசு: கீட: பதங்கோ வக்துமர்ஹதி I**
**சிவரூபம் ஸ்வரூபம் ச ந ஜானாதி யதஸ்வயம் II 195 II**

*195.* தன்னைப் பற்றியும் சிவனைப் பற்றியும் ஒருவன் தானாக அறிந்து கொள்ள முடியாதது போல, குரு இன்றிய ஒருவனை வெறும் ஒரு விலங்காக, புழுவாக அல்லது விட்டில் பூச்சியாகக் கருதலாம்.

குறிப்புகள்: குரு இல்லாமல் ஒருவனுக்கு விவேகம் வருவதில்லை. அவன் தனது வாழ்க்கையை ஒரு மிருகத்தைப் போல, புழுவைப் போல, விட்டில் பூச்சியைப் போல வீணாக்குகிறான்.

**தஸ்மாத்ஸர்வப்ரயத்னேன ஸர்வஸங்க விவர்ஜித: I**

***விஹாய சாஸ்த்ர ஜாலானி குருமேவ ஸமாச்ரயேத்***
***|| 196 ||***

*196.* எனவே எல்லா விதத்திலும், மறை நூல்களின் மறுப்புகளையெல்லாம் விடுத்து, மக்களுடனுள்ள அனைத்து தொடர்புகளையும் தவிர்த்து, ஒருவன் குருவையே சார்ந்திருக்க வேண்டும்.

குறிப்புகள்: குருவைச் சார்ந்திருத்தல் என்பது அவரது உபதேசங்களை அப்படியே கடைப்பிடித்து அவருக்கு முழுமனதுடன் தொண்டு செய்வதைக் குறிக்கிறது.

***நிரஸ்தஸர்வஸந்தேஹோ ஏகீக்ருத்ய ஸுதர்சனம் |***
***ரஹஸ்யயம் யோ தர்சயதி பஜாமி குருமீச்வரம் || 197 ||***

*197.* எந்தவித சந்தேகமும் இன்றி, பரம்பொருளைப் பற்றிய ஒன்றிய நல்நோக்குடன் எவர் ரகசியங்களை யெல்லாம் தெரிவித்து உயரிய தர்சனத்திற்கு உதவுகிறாரோ அந்த ஈசுவர சொரூபியான குருவை நான் வணங்குகிறேன்.

***ஞானஹீனோ குருஸ்த்யாஜ்யோ மித்யாவாதீ விடம்பக: |***
***ஸ்வவிச்ராந்திம் ந ஜானாதி பரசாந்திம் கரோதி கிம்***
***|| 198 ||***

*198.* ஞானம் இன்றி, பொய் சொல்லி, வீண் டம்பத்துடன் திரியும் குரு ஒருவனால் தனக்கே அமைதியைத் தேடிக்கொள்ள முடியாது. பிறருக்கு அவரால் எவ்விதம் அமைதியை அளிக்க முடியும்?

***சிலாயா: கிம் பரம் ஞானம் சிலாஸங்கப்ரதாரணே |***
***ஸ்வயம் தர்தும் ந ஜனாதி பரம் நிஸ்தாரயேத் கதம் ||199||***

*199.* மற்ற கற்களை மூழ்காமல் செய்வதற்கு ஒரு கல்லிற்கு ஏதாவது விசேஷ அறிவு இருக்க முடியுமோ?

ஆற்று வெள்ளத்தை எதிர்த்து அதனாலேயே போக முடியாது. மற்ற கற்களை ஆற்று வெள்ளத்தை எதிர்த்துச் செல்ல அதனால் எப்படி உதவமுடியும்?

**நவந்தனீயாஸ்தே கஷ்டம் தர்சனாத்ப்ராந்திகாரகா: |**
**வர்ஜயேத்தான் குரூன் தூரே தீரானேவ ஸமாச்ரயேத்**
**|| 200 ||**

*200.* இத்தகைய குருமார்கள் எவ்விதத்திலும் வணங்கத்தக்கவர்கள் அல்லர். எவ்வளவு துக்ககரமானது இது? அவர்களது பார்வையே மயக்கத்தை அளிக்கவல்லது. இத்தகைய குருமார்களை தூரத்திலிருந்தே ஒதுக்கிவிட வேண்டும். ஒருவன் சான்றோரையே அணுகவேண்டும்.

**பாஷண்டின: பாபரதா: நாஸ்திகா பேதபுத்தய: |**
**ஸ்திரீலம்படா துராசாரா: க்ருதக்னா பகவ்ருத்தய: || 201 ||**
**கர்மப்ரஷ்டா: க்ஷமாநஷ்டா நிந்த்யதர்கைஸ்ச வாதின: |**
**காமின: க்ரோதினஸ்சைவ ஹிம்ஸ்ராஸ்சண்டா: சடாஸ்ததா**
**|| 202 ||**
**ஞானலுப்தா ந கர்தவ்யா மஹாபாபஸ்ததா ப்ரியே |**
**ஏப்யோ பின்னோ குரு: ஸேவ்ய: ஏகபக்த்யா விசார்ய ச**
**|| 203 ||**

*201, 202, 203* பார்வதி! வேஷதாரிகள், வேதங்களில் நம்பிக்கை இல்லாதவர்கள், தொடர்ந்து பாபம் செய்பவர்கள், நாஸ்திகர்கள், பெண் பித்தர்கள், தீவினை புரிபவர்கள், ஏமாற்றுக்காரர்கள், போலி சமயவாதிகள், வேதம் காட்டும் கர்மமார்க்கத்தினின்று வழுவியவர்கள், பொறுமை அற்றவர்கள், வீண் தர்க்கத்தில் ஈடுபடுபவர்கள், புலன் இன்பத்தில் நாட்டம் கொள்பவர்கள், கோபம் கொள்பவர்கள், ஆத்திரம் கொண்டவர்கள், பகுத்தறிவுக்கு உட்படாதவர்கள், ஞானம் அற்றவர்கள், மகாபாபிகள் இத்தகைய குருமார்களைப் பூரணமாக ஒதுக்க வேண்டும்.

உண்மையான குருமார்களை ஒருவன் ஒருமனதான பக்தியுடனும் விவேகத்துடனும் அணுக வேண்டும்.

**சிஷ்யாதன்யத்ர தேவேசி ந வத்யேத்யஸ்ய கஸ்யசித் I**
**நராணம் ச பலப்ராப்தௌ பக்திரேவ ஹி காரணம்**
*II 204 II*

*204.* தேவி! சிஷ்யனைத் தவிர வேறு யாருக்கும் இது சொல்லப்படக் கூடாது. மனிதர்கள் தாங்கள் விரும்பியதை அடைவதற்கு முக்கியமாக வேண்டியது பக்தியேயாகும்.

குறிப்புகள்: ஞானம், பக்தி மற்றும் முக்தியை அடைய சிரத்தையும் பக்தியும் பெரும் பங்கு வகிக்கின்றன.

**கூடோ த்ருடஸ்ச ப்ரீதஸ்ச மௌனேன ஸுஸமாஹித: I**
**ஸக்ருத்காமகதௌ வாபி பஞ்சதா குருரீரித: *II 205 II***

*205.* மறைந்திருப்பவர்கள், உறுதியாயிருப்பவர்கள், அன்பு செலுத்தி திருப்தியாயிருப்பவர்கள், மௌனமாக ஒன்றுபட்ட மனதுடையவர்கள், இஷ்டம் போல் சுற்றித் திரிந்தாலும் திடீரென்று தோன்றி சிஷ்யனை ஆசீர்வதிப்பவர்கள் - இவர்கள் ஐந்து வகையான குருமார்கள்.

**ஸர்வம் குருமுகால்லப்தம் ஸபலம் பாபநாசனம் I**
**யத்யத் ஆத்மஹிதம் வஸ்து தத்தத் த்ரவ்யம் ந வஞ்சயேத்**
*II 206 II*

*206.* குருவினிடமிருந்து உபதேசங்கள் மற்றும் ஆசீர்வாதங்கள் வடிவில் பெறப்பட்டது அனைத்தும் பயனுள்ளவை. சீடனது பாபங்களைப் போக்கவல்லவை. சீடனுக்கு நலம் செய்யவல்லவை. சீடன் குருவின் செல்வத்தை எந்த விதத்திலும் வஞ்சிக்கக் கூடாது.

**குருதேவார்ப்பணம் வஸ்து தேன துஷ்டோஸ்மி ஸுவ்ரதே!**

**ஸ்ரீகுரோ: பாதுகாம் முத்ராம் மூலமந்த்ரம் ச கோபயேத**
**|| 207 ||**

207. பெண்மணியே! சீடனால் குருவிற்கு சமர்ப்பிக்கப்படும் எந்தப் பொருளானாலும் நான் திருப்தி அடைகிறேன். குருவின் பாதுகைகள், முத்திரைகள், குரு அளித்த மூல மந்திரம் ஆகியவை ரகசியமாக வைக்கப் படல் வேண்டும்.

**நதாஸ்மி தே நாத பதாரவிந்தம்**
**புத்தீந்திரிய ப்ராண மனோ வசோபி: |**
**யச்சிந்த்யதே பாவித ஆத்மயுக்தௌ**
**முமுக்ஷுபி: கர்மமயோபசாந்தயே || 208 ||**

208. ''தேவனே! தங்கள் வார்த்தைகள், மனம், ப்ராணன், புத்தி மற்றும் எல்லாப் புலன்களின் மூலம் தங்கள் செயல்களின் விளைவுகளிலிருந்து விடுபட விரும்பும் சிரத்தையுடன் கூடிய பக்தர்களால் பக்தியுடன் போற்றப்படும் உங்கள் பாத கமலங்களை நான் வணங்குகின்றேன்'', என்றாள் பார்வதி.

**அனேன யத்பவேத்கார்யம் தத்வதாமி தவ ப்ரியே |**
**லோகோபகாரகம் தேவி லௌகிகம் து விவர்ஜயேத்**
**|| 209 ||**

209. ''பார்வதி! இதனால் என்ன அடையப்படும் என்பதை உனக்குக் கூறுகிறேன். உலக நன்மைக்காகத் தான் உனக்கு இதைச் சொல்லுகிறேன். ஒருவன் அவன் மனத்திலிருந்து உலக எண்ணங்களைப் பூரணமாக ஒதுக்கிவிட வேண்டும்'', என்று மஹாதேவன் சொன்னார்.

**லௌகிகாத்தர்மதோ யாதி ஞானஹீனோ பவார்ணவே |**
**ஞானபாவே ச யத்ஸர்வம் கர்ம நிஷ்கர்ம சாம்யதி ||210||**

210. இந்த ஸம்ஸார சாகரத்தில் ஞானம் இல்லாதவன் பெரும் துன்பத்திற்காளாகின்றான். ஒருவன் ஆத்ம ஞானத்தைப் பெறுகையில் கர்மமும், நிஷ்கர்மமும் இரண்டும் இல்லாதாகின்றன.

**இமாம்து பக்திபாவேன படேத்வை ச்ருணுயாதபி |**
**லிகித்வா யத்ப்ரதானேன தத்ஸர்வம் பலமச்னுதே || 211 ||**

211. எவர் இதை சிரத்தையுடனும் பக்தியுடனும் படிக்கிறாரோ, அல்லது கேட்கிறாரோ அல்லது ஒரு புத்தகத்தில் எழுதுகிறாரோ, அதை பிறருக்கு பரிசாக அளிக்கிறாரோ, அவர் அனைத்துப் புண்ணியத்தையும் அடைகிறார்.

**குருகீதாமிமாம் தேவி ஹ்ருதி நித்யம் விபாவய |**
**மஹாவ்யாதிகதைர்துக்கை: ஸர்வதா ப்ரஜபேன்முதா**
**|| 212 ||**

212. தேவி! நீ இந்த குருகீதையை மிகுந்த பக்தியுடன் இதயத்தில் தியானிப்பாயாக. தீராத வியாதிகளால் நீ வருந்த நேரிடினும் மகிழ்ச்சியான இதயத்துடன் நீ இதைப் பாராயணம் செய்ய வேண்டும்

**குருகீதாக்ஷரைகைகம் மந்த்ரராஜமிதம் ப்ரியே |**
**அன்யே ச விவிதா மந்த்ரா: காம் நார்ஹந்தி ஷோடசீம்**
**|| 213 ||**

213. அன்பான பார்வதியே! குருகீதையின் ஒவ்வொரு எழுத்தும் மந்திர ராஜனாகும் (மந்திரங்களில் சிறந்தது ஆகும்). மற்ற பல்வகை மந்திரங்கள் எல்லாம் இதில் பதினாறில் ஒருபங்கு மகத்துவம் கூட பெறாது.

**அனந்தபலமாப்னோதி குருகீதாஜபேன து |**
**ஸர்வபாபஹரா தேவி ஸர்வதாரித்ர்ய நாசினீ || 214 ||**

**214.** குருகீதா ஜபத்தினால் ஒருவன் கணக்கற்ற பலன்களைப் பெறுகிறான். தேவி! அது அனைத்துப் பாபங்களையும் போக்குகிறது. வறுமை அனைத்தையும் அகற்றுகிறது.

**அகாலம்ருத்யுஹர்த்ரீ ச ஸர்வசங்கடநாசினி |**
**யக்ஷராக்ஷஸ பூதாதி கோரவ்யாக்ர விதாதினீ || 215 ||**

**215.** குருகீதையைப் படிப்பதால் அகால மரணம் மற்றும் எல்லாத் தொல்லைகளும் இல்லாதாகின்றன. யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், பூதங்கள், கள்ளர் பயம் மற்றும் புலி போன்ற மிருக பயம் அனைத்தையும் அது போக்குகிறது.

**ஸர்வோபத்ரவகுஷ்டாதி துஷ்டதோஷ நிவாரிணி |**
**யத்பலம் குருஸாந்நித்யாத்தத்பலம் படனாத்பவேத் || 216 ||**

**216.** எல்லா கஷ்டங்களையும், துன்பங்களையும், குஷ்டம் போன்ற வியாதிகளையும், பெரும் பாபங்களையும் குருகீதையைப் படிப்பதானது போக்குகிறது. குருகீதையைப் படிப்பதால் குருவுடன் இருக்கும் நற்பேறு ஒருவனுக்குக் கிட்டுகிறது.

குறிப்புகள்: குருவிடமிருந்து தொலைவில் விலகி இருப்பவன் குருகீதையைப் படிப்பதால் குருவுடன் இருக்கும் பலனைப் பெற்றவன் ஆகிறான்.

**மஹாவ்யாதிஹரா ஸர்வவிபூதே: ஸித்திதா பவேத் |**
**அதவா மோஹனே வச்யே ஸ்வயமேவ ஜபேத்ஸதா**
**|| 217 ||**

**217.** இந்த குருகீதை எல்லா ஸித்தி ஆற்றல்களையும், தெய்வீக ஐஸ்வர்யங்களையும் தந்து சகல வியாதிகளையும் போக்கி அருள் செய்கிறது. மோஹனம், வசியம் போன்ற

நிலைமைகளில் ஒருவன் குருகீதையைப் பாராயணம் செய்ய வேண்டும்.

குறிப்புகள்: மோஹனம் என்பது பிறரை மயக்குதல் ஆகும். வசியம் என்பது பிறரைத் தன் இச்சைக்குள் வைத்திருப்பதாகும். மோஹனம், வசியம் போன்றவற்றின் விளைவுகளிலிருந்து விடுபடுவதற்கு குருகீதை பாராயணத்தை ஒருவன் பயன்படுத்தலாம். அதன் உதவியுடன் ஒருவன் இவற்றைப் பயிலவும் செய்யலாம்.

***குசதூர்வாஸனே தேவி ஹ்யாஸனே சுப்ரகம்பளே |***
***உபவிச்ய ததோ தேவி ஜபேதேகாக்ரமானஸ: || 218 ||***

*218.* குச அல்லது தூர்வ புல் மீது அமர்ந்தோ அல்லது வெள்ளைக் கம்பளியின் மீது அமர்ந்தோ ஒன்றித்த மனத்துடன் குருகீதையை ஒருவன் ஜபம் செய்ய வேண்டும்.

***சுக்லம் ஸர்வத்ர வை ப்ரோக்தம் வச்யே ரக்தாஸனம் ப்ரியே |***
***பத்மாஸனே ஜபேந்நித்யம் சாந்தி வச்யகரம் பரம் || 219 ||***

*219.* எல்லாவற்றிற்கும் வெள்ளை ஆசனம் சிறந்தது எனப்படுகிறது. வசியத்திற்கு சிவப்பு நிறம் பயன்படுத்தப்படுகிறது. பத்மாசனத்தில் அமர்ந்து மேலான அமைதியைப் பெறுவதற்கு ஜபம் செய்ய வேண்டும்.

***வஸ்த்ராஸனே ச தாரித்ர்யம் பாஷாணே ரோகஸம்பவ: |***
***மேதின்யாம் துக்கமாப்னோதி காஷ்டே பவதி நிஷ்பலம் || 220 ||***

*220.* துணியில் அமர்ந்து ஜபம் செய்தால் ஒருவன் வறுமையால் பீடிக்கப்படுகிறான். கல்லில் அமர்ந்து ஜபித்தால் நோயினாலும், தரையில் அமர்ந்து ஜபித்தால் வலியினாலும் பீடிக்கப்படுகிறான். பலகையில் அமர்ந்து

ஜபித்தால் எந்தப் பலனும் கிட்டாமல் அவனது முயற்சி வீண்போய்விடும்.

**க்ருஷ்ணஜினே ஞான ஸித்திர் மோக்ஷச்ரோவ்யாக்ரசர்மணி ।**

**குசாசனே ஞானஸித்தி: ஸர்வஸித்திஸ்து கம்பலே ॥ 221॥**

221. ஜபத்தின் போது மான் தோலில் அமர்ந்தால் ஞானத்தையும், புலித்தோலில் அமர்ந்தால் ஒருவன் மோக்ஷத்தையும் அடைகிறான். குசப்புல் ஆசனத்தில் அமர்ந்தால் ஒருவன் ஆத்ம ஞானத்தையும், கம்பளி ஆசனத்தில் அமர்ந்தால் ஒருவன் அனைத்து மானஸீக சக்திகளையும் பெறுகிறான்.

***ஆக்னேய்யாம் கர்ஷணம் சைவ·வாயவ்யாம் சத்ருநாசனம் ।***
**நைர்ருத்யாம் தர்சனம் சைவ ஈசான்யாம் ஞானமேவ ச**
**॥ 222 ॥**

222. தென்கிழக்கு திசையை நோக்கி ஜபம் செய்தால் பிறரை வசீகரிக்கும் சக்தியையும், வடமேற்கு திசையை நோக்கினால் பகைவர்களற்ற நிலைமையையும், தென்மேற்குத் திசையை நோக்கினால் இறைவன் தரிசனத்தையும், வடகிழக்கு திசையை நோக்கினால் ஒருவன் அறிவையும் பெறுகிறான்.

**உதங்முகம் சாந்திஜப்யே வச்யே பூர்வமுகஸ்ததா।**
**யாம்யே து மாரணம் ப்ரோக்தம் பஸ்சிமே ச தனாகம :**
**॥ 223 ॥**

223. ஜபத்தின்போது ஒருவன் வடதிசையை நோக்கினால் அமைதியையும், கிழக்கு திசையை நோக்கினால் பிறரை வசீகரிக்கும் சக்தியையும், தெற்கை நோக்கினால் மரணத்தையும் மேற்கை நோக்கினால் பெரும் செல்வத்தையும் ஒருவன் பெறுகிறான்.

**மோஹனம் ஸர்வபூதானாம் பந்த மோக்ஷகரம் பரம் |**
**தேவராக்ஞாம் ப்ரியகரம் ராஜானம் வசமானயேத் || 224 ||**

224. இந்த குருமந்திரம் அனைத்தையும் ஈர்க்கும் சக்தி வாய்ந்தது. அனைத்து பந்தங்களையும் அது அழித்து, முக்தியை நல்குகிறது. இந்திரனை அது உனக்கு உதவச் செய்கிறது. அரசர்களையும் அது உன் கீழ் கொணர வல்லது.

**முகஸ்தம்பகரம் சைவ குணானம் ச விவர்தனம் |**
**துஷ்கர்மநாசனம் சைவ ததா ஸத்கர்ம ஸித்திதம் || 225 ||**

225. இந்த மந்த்ரம் ஒருவனது பேச்சாற்றலை நிறுத்த வல்லது. அது ஒருவனது பண்புகளை அதிகரிக்கிறது. அனைத்து தீயகர்மங்களையும் அழித்து, நற்கர்மங்களை தீவிரப்படுத்துகிறது.

குறிப்புகள்: நல்லதைச் செய்வதற்கும், தீயதைத் தவிர்ப்பதற்கும் உள்ள ஆற்றல் ஈண்டு குறிப்பிடப்படுகிறது.

**அஸித்தம் ஸாதயேத்கார்யம் நவக்ரஹபயாபஹம் |**
**து:ஸ்வப்னநாசனம் சைவ ஸுஸ்வப்னபலதாயகம் || 226 ||**

226. தோற்பதுபோல் தோன்றும் செயல்களிலும் ஒருவன் வெற்றி அடைகிறான். கிரகங்களின் தீய விளைவுகளின் பயத்தை அது போக்கவல்லது. அனைத்து தீய கனவுகளையும் இல்லாதாக்கி அது நற்கருமங்களின் பலன்களை அளிக்கிறது.

குறிப்புகள் : இந்த சுலோகத்தில் குறிப்பிடப்படும் பல ச்ருதியானது குருகிருபை, குரு மந்திரஜபம், குருகீதஜபம் ஆகிய அனைத்திற்கும் பொருந்தும்.

**மோஹ சாந்திகரம் சைவ பந்தமோக்ஷகரம் பரம் |**
**ஸ்வரூப ஞானநிலையம் கீதாசாஸ்த்ரமிதம் சிவே || 227 ||**

227. மங்கள ரூபியே, குழப்பமும் அமைதி இன்மையும் இருக்கும் இடங்களில் இந்த கீதா சாஸ்திரமானது அமைதியைக் கொணர்கிறது. அனைத்து பந்தங் களிலிருந்தும் அது விடுதலை அளிக்கிறது. அனைத்து அறிவு மற்றும் ஆத்மஞானத்தின் இருப்பிடம் அது.

**யம்யம் சிந்தயதே காமம் தம் தம் ப்ராப்நோதி நிஸ்சயம் /**
**நித்யம் ஸெளபாக்யதம் புண்யம் தாபத்ரயகுலாபஹம்**
*// 228 //*

228. மனிதன் நினைப்பது எல்லாவற்றையும், ஆசைப்படுவது அனைத்தையும் பெறுகின்றான். அழியாத பேற்றையும் புண்ணியத்தையும் அது அளிப்பதுடன், அத்யாத்மிக, அதிபௌதிக, அதிதைவிக துக்கங்கள் அனைத்தையும் வேருடன் இல்லாதாக்குகிறது.

**ஸர்வசாந்திகரம் நித்யம் ததா வந்த்யாஸுபுத்ரதம் /**
**அவைதவ்யகரம் ஸ்திரீணாம் ஸெளபாக்யஸ்ய விவர்தனம்**
*229 //*

229. குழந்தையில்லாதவள் ஒரு நன்மகனைப் பெற்று எவ்வளவு மகிழ்ச்சி அடைவாளோ அவ்வளவு அமைதியையும் நிரந்தர இன்பத்தையும் இது அளிக்கிறது. பெண்களுக்கு இந்த குருகீதை எல்லா நலன்களையும், அவைதவ்யத் (விதவை ஆகாமலிருக்கும் நன்னிலைமை யையும்) தையும் இந்த குருகீதை நல்குகிறது.

**ஆயுராரோக்ய மைச்வர்யம் புத்ர பௌத்ரப்ரவர்தனம் /**
**நிஷ்காமஜாபீ விதவா படேத் மோக்ஷமவாப்னுயாத்**
*// 230 //*

230. ஆரோக்யம், நீண்ட ஆயுள், செல்வம், குழந்தைப் பேறு அனைத்தையும் ஒருவன் பெறுகிறான். எந்த சுயநல

நோக்கும் இன்றி இதைப் படிக்கும் விதவை முக்தியடைகிறாள்.

**அவைதவ்யம் ஸகாமா து லபதே சான்யஜன்மனி ।**
**ஸர்வதுக்கமயம் விக்னம் நாசேயத்தாப ஹாரகம் ॥ 231 ॥**

*231.* இவ்வுலகப் பேறுகளைப் பெற வேண்டும் என்ற விருப்பத்துடன் இதைப் படிக்கும் ஒரு விதவைப் பெண் மற்ற பிறவிகளில் விதவையாக ஆகமாட்டாள். அது அவளது அனைத்து துன்பங்களையும், பயங்களையும், தடைகளையும், இடர்களையும் நீக்குகிறது.

**ஸர்வபாபப்ரசமனம் தர்மகாமார்த்தமோக்ஷதம் ।**
**யம்யம் சிந்தயதே காமம் தம் தம் ப்ராப்நோதி நிஸ்சிதம்**
**॥ 232 ॥**

*232.* இது அனைத்துப் பாபங்களையும் அழிக்க வல்லது. தர்மம், செல்வம், முக்தி மற்றும் விரும்பியதனைத்தையும் தரவல்லது. உறுதியாக அவனது ஆசைகள் அனைத்தும் பூர்த்தியாகின்றன.

**காம்யானாம் காமதேனுர்வை கல்பிதே கல்பபாதப : ।**
**சிந்தாமணிஸ்சிந்திதஸ்ய ஸர்வமங்களகாரகம் ॥ 233 ॥**

*233.* பெற வேண்டியவற்றுள் குருகீதை காமதேனு வாகும். மனதில் நினைக்கவேண்டியவற்றுள் அது கல்பதரு. அனைத்து மங்களத்தையும் நல்கவல்ல சிந்தாமணி ரத்தினம் அது.

குறிப்புகள்: விரும்பியதனைத்தையும் நல்கவல்ல காமதேனு, கல்பவிருட்சம் மற்றும் சிந்தாமணி போன்றவை சொர்க்க வாசிகளுக்கு கிடைப்பவையாகும்.

**லிகித்வா பூஜயேத்யஸ்து மோக்ஷச்ரிய மவாப்னுயாத் ।**
**குருபக்திர்விசேஷேண ஜாயதே ஹ்ருதி ஸர்வதா ॥ 234 ॥**

234. குருகீதை முழுவதையும் கையினால் எவன் எழுதுகிறானோ அதற்கு பூஜையும் செய்கிறானோ அவன் மோட்சம் அடைகிறான். இந்த இதயத்தில் சதா குருவின்பால் பக்தி தோன்றும்.

**ஜயந்தி சாக்தா: சௌராஸ்ச காணபத்யாஸ்ச**
**வைஷ்ணவா : I**
**சைவா: பாசுபதா: ஸர்வே ஸத்யம் ஸத்யம் ந சம்சய :**
*II 235 II*

235. சக்தியை வழிபடும் சாக்தர்களாலும், கணபதியை வணங்கும் காணாபத்யர்களாலும், விஷ்ணு பக்தர்களான வைஷ்ணவர்களாலும், சிவபக்தர்களாலும் அனைவராலும் சமமான பக்தியுடன் குருகீதை போற்றப்படுகிறது. இது உண்மை. இதுவே உண்மை. இதில் சந்தேகம் எதுவுமே கிடையாது.

***இதிஸ்ரீ ஸ்காந்தோத்தரகண்டே உமா மஹேஸ்வரஸம்வாதே ஸ்ரீகுருகீதாயாம் த்விதீயோ அத்யாய:***

ஸ்கந்த புராணத்தில் உத்தர கண்டத்தில் உமா மகேஸ்வர ஸம்பாஷணையில் குருகீதையில் இரண்டாம் அத்யாயம் முற்றிற்று.

## அத்யாயம் 3

*அத காம்யஜபஸ்தானம் கதயாமி வரானனே ।*
*ஸாகராந்தே ஸரித்தீரே தீர்த்தே ஹரிஹராலயே ॥ 236 ॥*
*சக்திதேவாலயே கௌஷ்டே ஸர்வதேவாலயே சுபே ।*
*வடஸ்ய தாத்ர்யா மூலே வா மடே ப்ருந்தாவனே ததா ॥ 237 ॥*
*பவித்ரே நிர்மல தேசே நித்யானுஷ்டானதோபி வா ।*
*நிர்வேதனேன மௌனேன ஜபமேதத் ஸமாரபேத் ॥ 238 ॥*

236, 237 &238 சிவபெருமான் பார்வதியிடம் கூறுகிறார்: " பார்வதி! ஒருவன் தான் விரும்பியதைப் பெற வேண்டி குருகீதை ஜபத்தை எங்கெங்கு செய்யலாம் என்பதைக் கூறுகிறேன். கடற்கரை, நதிக்கருகில், புண்ணியஸ்தலம், சிவன், தேவர் அல்லது விஷ்ணு கோயில், மாட்டுக்கொட்டகை, எல்லா ஆலயங்கள், ஆலமரத்தின் அடியில், விருந்தாவனம் அல்லது ஏதாவது ஒரு தூய இடத்தில் குருகீதா பாராயணம் மேற்கொள்ளப்படலாம். ஒருவன் தனது நித்திய கர்ம அனுஷ்டானங்களை முடித்தபிறகு மௌனத்தைக் கடைப்பிடித்து, தூய இதயத்துடன் இதைத் தொடங்க வேண்டும்.

*ஜாப்யேன ஜயமாப்னோதி ஜபஸித்திம் பலம் ததா ।*
*ஹீனம் கர்ம த்யஜேத் ஸர்வம் கர்ஹிதஸ் தானமேவ ச ॥ 239 ॥*

239. இந்த ஜபத்தை செய்வதன் மூலம் ஒருவன் ஜபஸித்தியையும் வெற்றியையும் சந்தேகமின்றி அடைகிறான். அனைத்துத் தடுக்கப்பட்ட செயல்களையும், இடங்களையும் ஒருவன் விலக்க வேண்டும்.

*ச்மசானே வில்வமூலே வா வடமூலாந்திகே ததா ।*

*ஸித்த்யந்தி கானகே மூலே சூதவ்ருக்ஷஸ்ய ஸந்நிதெள*
*|| 240 ||*

240. வெற்றியை அடைய ஒருவர், மயானத்திலோ, வில்வம், ஆலம், மா அல்லது கனகமரத்தின் கீழோ இதை ஜபம் செய்யலாம்.

*பீதாஸனம் மோஹனே து ஹ்யஸினம் சாபிசாரிகே*
*ஞேயம் சுக்லம் ச சாந்த்யர்த்தம் வச்யே ரக்தம் ப்ரகீர்த்திதம்*
*|| 241 ||*

241. மோஹனம் செய்ய மஞ்சள் நிற ஆசனமும், அமைதி அடைய வெள்ளை நிற ஆசனமும், வசியம் செய்ய சிவப்பு நிற ஆசனமும் ஒருவன் பயன்படுத்த வேண்டும்.

*ஜபம் ஹீனாஸனம் குர்வத் ஹீனகர்ம பலப்ரதம் |*
*குருகீதாம் ப்ரயாணே வா ஸங்க்ராமே ரிபுஸங்கடே || 242 ||*
*ஜபன் ஜயமவாப்நோதி மரணே முக்திதாயிகா |*
*ஸர்வ கர்மாணி ஸித்த்யந்தி குருபுத்ரே நஸம்சய : || 243||*

242, 243, தடைசெய்யப்பட்ட ஆசனத்தின் மீது அமர்ந்து ஒருவன் ஜபம் செய்வதால் ஒருவன் தடுக்கப்பட்ட செயல்களின் பலன்களை அடைகிறான். மரணப் படுக்கையில் ஜபித்தால் ஒருவன் முக்தியை அடைகிறான். பிரயாணத்தின் பொழுதோ, சண்டையிலோ, பகைவர் களை சமாளிக்கும்பொழுதோ ஒருவன் குருகீதையை ஜபித்தால் வெற்றியை அடைகிறான். அவனுக்கும், அதுபோல (குருபுத்திரனுக்கும்) சீடனுக்கும் எல்லாச் செயல்களும் விரும்பிய பலன்களைக் கொடுக்கின்றன.

*குருமந்த்ரோ முகே யஸ்ய தஸ்ய ஸித்தயந்தி நான்யதா |*
*தீக்ஷயா ஸர்வகர்மாணி ஸித்தயந்தி குருபுத்ரகே || 244 ||*

244. எவனது நாவில் எப்பொழுதும் குருமந்திரம் இருக்கிறதோ அவனது எல்லாச் செயல்களும் பலனளிக்கின்றன. இல்லையெனில் கிடையாது. தீக்ஷையினால் ஒருவன் சகல காரிய ஸித்தியை அடைகிறான். (குரு புத்திரன்) சீடனுக்கு இது விசேஷமாகப் பொருந்தும்.

குறிப்புகள் : உண்மையில் சீடனே உண்மையான குரு புத்திரன்

**பவமூலவிநாசாய சாஷ்டபாச நிவிருத்தயே |**
**குருகீதாம்பஸி ஸ்நானம் தத்வக்ஞ: குருதே ஸதா || 245 ||**

245. வேர் மற்றும் கிளைகளுடன் ஸம்ஸாரத்தை இல்லாமலாக்கவும், எட்டுவிதமான பந்தங்களை இல்லாமலாக்கவும், உண்மையறிந்த ஒருவன் குருகீதா நீரில் ஸ்நானம் செய்கிறான்.

குறிப்புகள் : உண்மையான கங்கை என்பது குருகீதா ஜலமேயாகும் என்பதை இந்த சுலோகம் குறிக்கிறது.

**ஸஏவ ஸத்குரு: ஸாக்ஷாத் ஸதஸத்பிரம்ம வித்தம: |**
**தஸ்ய ஸ்தானானி ஸர்வாணி பவித்ராணி நஸம்சய: || 246 ||**

246. உண்மையையும், பொய்யையும் அறிந்தவரே ஸத்குரு ஆவார். அவரது அனைத்து இடங்களும் புண்ணியமானவையே. இதில் எள்ளளவும் சந்தேகம் கிடையாது.

**ஸர்வ சுத்த : பவித்ரோ அஸௌ ஸ்வபாவாத்யத்ர**
**தத்ர தேவகண : ஸர்வே க்ஷேத்ர பீடே [illegible] ச || 247 ||**

**247.** தூய குருவசிக்கும் இடத்தில் எல்லா தேவர்களும் வசிக்கிறார்கள். குருவின் இல்லத்தைச் சுற்றிலும் அவர்கள் திரிகின்றனர்.

குறிப்புகள் குருவின் இல்லம் தேவர்களின் வாசஸ்தலமாக ஆவதால் அது சொர்க்கத்திற்கு நிகராகிறது.

*ஆசனஸ்தா: சயானா வா கச்சந்தஸ்திஷ்டந்தோபி வா |*
*அச்வாரூடா கடாரூடாம் ஸுஷுப்தா ஜாக்ரதோபி வா*
*|| 248 ||*

*சுசிபூதா ஞானவந்தோ குருகீதாம் ஜபந்தி யே |*
*தேஷாம் தர்சன ஸம்ஸ்பார்சாத் திவ்ய ஞானம் ப்ரஜாயதே*
*//249 ||*

**248, 249.** அமர்ந்தோ, படுத்துக்கொண்டோ, நடந்தோ, நின்றோ யானை அல்லது குதிரை மீதமர்ந்தோ, விழிப்புடனோ அல்லது ஸுஷுப்தி நிலையிலோ குருகீதையை ஜபிக்கும் புண்ணிய ஆத்மாக்களைப் பார்த்தாலோ தொட்டாலோ ஒருவன் ஞானத்தை அடைகிறான்.

(249 - வது சுலோகத்தின், இறுதிப் பகுதி '*புனர் ஜன்ம நவித்யதே*' என்றும் வாசிக்கப்படுகிறது. 'மீண்டும் பிறவி கிடையாது' என்பது இதன் பொருள்).

*ஸமுத்ரே வை யதாதோயம் க்ஷீரே க்ஷீரம் ஜலே ஜலம் |*
*பின்னே கும்பே யதாகாசம் ததாஆத்மா பரமாத்மனி*
*|| 250 ||*

*ததைவ ஞானவான் ஜீவ : பரமாத்மனி ஸர்வதா |*
*ஐக்யேன ரமதே ஞானீ யத்ர குத்ர திவாநிசம் || 251 ||*
*ஏவம் விதோ மஹாயுக்த : ஸர்வத்ர வர்ததே ஸதா |*
*தஸ்மாத் ஸர்வப்ரகாரேண குருபக்திம் ஸமாசரேத் || 252 ||*

**250, 251 & 252** ஆற்றுநீர் ஸமுத்திர ஜலத்துடனும், பால், பாலுடனும், தண்ணீர் தண்ணீருடனும், பானையில்

உள்ள ஆகாயம் வெளியில் உள்ள மஹாகாசத்துடனும் ஒன்றாவதுபோல ஜீவாத்மன் பரமாத்மனுடன் ஒன்றிவிடுகிறது. அதுபோல ஞானவான் இரவும் பகலும் பரம்பொருளுடன் இடையறாது ஒன்றியே வாழ்கிறான். இவ்வாறு மஹாயோகத்தில் கூடியவனாக அவன் எல்லா இடங்களிலும் இருக்கிறான். எனவே ஒருவன் சகலவிதத்திலும் குருபக்தியை கடைப்பிடிக்க வேண்டும்.

**குருஸந்தோஷணாதேவ முக்தோ பவதி பார்வதி ।**
**அணிமாதிஷு போக்த்ருத்வம் க்ருபயா தேவி ஜாயதே**
*|| 253||*

256. பார்வதி! குருவைத் திருப்திப்படுத்துவதால் ஒருவன் முக்தி அடைகிறான். அவரது அருளால் ஒருவன் அணிமா, மஹிமா, கரிமா போன்ற எட்டுவகை ஸித்திகளை அனுபவிக்க வல்லவனாகிறான்.

**ஸாம்யேன ரமதே ஞானீ திவா வாயதி வா நிசி ।**
**ஏவம்விதோ மஹாமௌனீ த்ரைலோக்யஸமதாம் வ்ரஜேத்**
*|| 254 ||*

254. இரவானாலும் பகலானாலும் ஞானி யாண்டும் சமநிலை ஆனந்தத்தில் இருந்துகொண்டே அதை அனுபவிக்கிறார். இவ்வாறு மூவுலகிலும் சமநிலையை மஹாமௌனீ அடைகின்றார்.

குறிப்புகள் : பிராரப்தத்தினால் எந்நிலையில் வைக்கப் பட்டாலும் எந்த வேலையில் ஈடுபட்டாலும் ஞானியை எதுவும் தொல்லைப்படுத்த முடியாது. எவரது மனம் பிரம்மத்தில் இன்புறுகிறதோ அவர் யாண்டும் மகிழ்ச்சியில் இருக்கிறார். துன்பம் என்பதே அவருக்குக் கிடையாது. *"யஸ்ய பிரம்மணி ரமதே சித்தம் நந்ததி நந்ததி நந்தத்யேவ்"* என்பது தான் அவரது நிலைமை.

*அத ஸம்ஸாரிண : ஸர்வே குருகீதா ஜபேன து ।*
*ஸர்வான் காமான்ஸ்து புஞ்ஜந்தி த்ரிஸத்யம் மம பாஷிதம்*
*॥ 255 ॥*

255. குருகீதையைத் திரும்பத் திரும்பப் பாராயணம் செய்வதால், உலகியலில் ஈடுபடும் மக்கள் அவர்கள் விரும்பும் அனைத்தையும் அடைவர். பார்வதி, நான் சொன்னதெல்லாம் உண்மை, உண்மை, உண்மை என்கிறேன்.

*ஸத்யம் ஸத்யம் புன : ஸத்யம் தர்மஸாரம் மயோதிதம் ।*
*குருகீதாஸமம் ஸ்தோத்ரம் நாஸ்தி தத்வம் குரோ:பரம்*
*॥ 256 ॥*

256. அது உண்மை. உண்மை. உண்மை தவிர வேறில்லை. இதுபற்றி நான் சொல்வது அனைத்தும் தர்மத்தின் சாரமாகும். குருகீதைக்கு சமமான பிரார்த்தனை வேறு கிடையாது. குருதத்துவத்தை விடச் சிறந்த வேறு உண்மை கிடையாது.

*குருர்தேவோ குருர்தர்மோ குரௌ நிஷ்டா பரம் தப : ।*
*குரோ : பரதரம் நாஸ்தி த்ரிவாரம் கதயாமி தே ॥ 257 ॥*

257. குருவே கடவுள். குருவே தர்மம். குருவிடம் திடமான நம்பிக்கையே மேலான தவம். குருவுக்கு மேலானது எதுவும் கிடையாது. இதை நான் மும்முறை உறுதியாகக் கூறுகிறேன்.

*தன்யா மாதா பிதா தன்யோ கோத்ரம் தன்ய குலோத்பவ: ।*
*தன்யா து வஸுதா தேவி யத்ர ஸ்யாத் குரு பக்ததா*
*॥ 258 ॥*

258. குருபக்தி திகழும் தாய், தந்தை, குடும்பம், பரம்பரை பூமி, அனைத்துமே ஆசிர்வதிக்கப்பட்டவர்கள், தேவி.

ஆகல்பஜன்ம கோடினாம் யக்ஞவ்ரததப: க்ரியா :।
தா : ஸர்வா : ஸபலா தேவி குருஸந்தோஷமாத்ரத:
॥ 259 ॥

259. தேவி, குருவைத் திருப்திப்படுத்துவதால் கோடிக்கணக்கான பிறவிகளில், கல்பங்களில் செய்த தவங்கள், யாகங்கள், சடங்குகள் பலனளிக்கின்றன.

சரீரமிந்திரியம் ப்ராணஸ்சார்த : ஸ்வஜன பந்துதா ।
மாத்ருகுலம் பித்ருகுலம் குருரேவ ந ஸம்சய: ॥ 260 ॥

260. உடல், இந்திரியங்கள், பிராணன், செல்வம், ஒருவனது உற்றார், தாயின் வம்சம், தந்தை வம்சம் அனைத்தும் ஒருவனது குருவில் அடக்கம். இதில் சிறிதும் ஐயமே கிடையாது.

மந்தபாக்யா ஹ்யசக்தாஸ்ச யே ஜனா நானுமன்வதே ।
குருஸேவாஸு விமுகா: பச்யந்தே நரகே அசுசௌ ॥261॥

261. அதிருஷ்டமற்றவர்கள், நலிந்தவர்கள், குருசேவை செய்வதைப் புறக்கணித்தவர்கள், குருவிற்குத் தொண்டு செய்யும் வாய்ப்பை இழந்தவர்கள் - இத்தகையோர் கடும் நரகில் உழல்வர்.

வித்யாதனம் பலம் சைவ தேஷாம் பாக்யம் நிரர்த்தகம் ।
யேஷாம் குருக்ருபா நாஸ்தி அதோ கச்சந்தி பார்வதீ
॥ 262 ॥

ப்ரஹ்மாவிஷ்ணுஸ்ச ருத்ரஸ்ச தேவதா: பித்ரு கின்னரா: ।
ஸித்தசாரண யக்ஷாஸ்ச அன்யே ச முனயோ ஜனா:
॥ 263 ॥

262, 263. குருகிருபை இன்றி கல்வி, செல்வம், பலம், செழிப்பு ஒன்றும் சாத்தியமில்லை. பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், தேவதைகள், பித்ருக்கள், கின்னரர்கள்,

ஸித்தர்கள், சாரணர்கள், ய்க்ஷர்கள், முனிவர்கள் நிலையை ஒருவன் அடைந்திருந்தாலும் குரு கிருபை இன்றேல் அவன் வீழ்வது திண்ணம்.

**குருபாவ : பரம் தீர்த்தமன்யதீர்த்தம் நிரத்தகம் I**
***ஸர்வதீர்த்தமயம் தேவி ஸ்ரீ குரோஸ்சரணாம் புஜம் II264II***

264. குருபாவம் (குருநிலை) என்பது மிகமிகப் புனிதம் வாய்ந்ததாகும். மற்றவை எல்லாம் அர்த்தமற்றவை. குருவின் திருப்பாதங்களில் அனைத்துப் புண்ணிய ஸ்தலங்களும் அடக்கம்.

குறிப்புகள்: குருவின்பால் சிஷ்யனுடைய மரியாதை யையும் மதிப்பையும்தான் ‘குருபாவம்’ உணர்த்துகிறது.

**கன்யாபோகரதா: மந்தா : ஸ்வகாந்தாயா : பராங்முகா :**
**அத : பரம் மயா தேவி கதிதந்ந மம ப்ரியே II 265 II**

265. தேவி! முறைப்படி திருமணம் செய்து கொண்ட மனைவியரை விடுத்து, தங்களது சொந்தப் பெண்கள் உட்பட பிறஸ்திரீகளுடன் சுகமனுபவிக்கும் நபர்கள், மூடர்கள், விலங்குணர்ச்சி மிக்கவர்கள், தாங்கள் இத் த்கையவர்கள்கூட குரு பக்தியினால் முன்னேற முடியும் என்பதைக் காட்டவே நான் இந்தப் பெரிய உண்மைகளை உனக்குக் கூறுகிறேன்.

**இதம் ரஹஸ்யமஸ்பஷ்டம் வக்தவ்யம் ச வரானனே I**
**ஸுகோப்யம் ச தவாக்ரே து மமாத்மப்ரீதயே ஸதி II 266 II**

266. வெளிப்படையாகத் தெளிவற்றது போலத் தோன்றும் புரிதற்கு அரிய இந்தப் பெரும் ரகசியத்தை நீ எனக்கு மிகவும் பிரியமானவள் என்பதால் நான் உனக்குக் கூறியிருக்கிறேன்.

இதை எல்லோருக்கும் தெரிவிக்கக் கூடாது. இது மிகவும் போற்றிப் பாதுகாக்க வேண்டியதாகும்.

**ஸ்வாமி முக்ய கணேசாத்யான் வைஷ்ணவவாதீன்ஸ்ச பார்வதி।**
**ந வக்தவ்யம் மஹாமாயே பாதஸ்பர்சம் குருஷ்வ மே ॥ 267 ॥**

267. மஹாதேவி! இது கணேசர், ஸுப்ரஹ்மண்யர், தேவர்கள், வைஷ்ணவர்கள் போன்ற எவருக்கும் தெரிவிக்கப்படக் கூடாதது. எனது பாதங்களைத் தொட்டு, தேவி! எனக்கு இந்த வாக்குறுதியை அளிப்பாயாக.

**அபக்தே வஞ்சகே தூர்த்தே பாஷண்டே நாஸ்திகாதிஷு**
**மனஸாபி ந வக்தவ்யா குருகீதா கதாசன ॥ 268 ॥**

268. மனதால் கூட குருகீதையானது பக்தி அற்றவர்களுக்கும், வஞ்சகர்களுக்கும், தீயோருக்கும், நம்பிக்கை அற்றவர்கட்கும், நாஸ்திகர்களுக்கும் மற்றும் இத்தகையோருக்கும் சொல்லப்படவே கூடாது.

குறிப்புகள் : இந்நூலில் குருவைப் பற்றி மிகைபடவே போற்றிக் கூறப்பட்டிருக்கிறது என்று நினைப்பவர்களுக்குக்கூட இது சொல்லப்படக் கூடாது. குரு தத்துவத்தைப் பற்றிய ரகசியங்களை அறிய அவர்கள் தகுதி அற்றவர்கள்.

**குரவோ பஹவ : ஸந்தி சிஷ்ய வித்தாபஹாரகா :।**
**தமேகம் துர்லபம் மன்யே சிஷ்யஹ்ருத் தாபஹாரகம் ॥ 269 ॥**

269. சீடர்களின் செல்வத்தை அபகரிக்கும் குருமார்கள் பலர் இவ்வுலகில் உண்டு. ஆனால் சீடர்களின் இதயத்தில் உள்ள தாபத்தைப் போக்கும் குருமார் அவர்களுள் மிக மிக அரிது.

**சாதுர்யவான் விவேகீ ச அத்யாத்ம ஞானவான் சுசி: |**
**மானஸம் நிர்மலம் யஸ்ய குருத்வம் தஸ்ய சோபதே || 270 ||**

270. திறமை, விவேகம், ஆற்றல், தூய்மை, அத்யாத்ம ஞானம், மற்றும் உள்ளத் தூய்மை உடையவரே குரு ஆவார். அவரது குருநிலை பிரகாசிக்கும், மற்றவர்களுடையதோ சோபிக்காது.

குறிப்புகள் : உண்மையான சீடனைப் பார்ப்பது எவ்வளவு கடினமோ, அவ்வளவு கடினம் தகுதியுள்ள ஒரு குருவைக் காண்பதுமாகும்.

**குரவோ நிர்மலா : சாந்தா : ஸாதவோ மிதபாஷிண: |**
**காமக்ரோதவிநிர் முக்தா: ஸதாசாரா:ஜிதேந்திரியா: || 271 ||**

271. இதயத்தில் தூய்மை உள்ளவர்களும், அமைதியும் அடக்கமும் உள்ளவர்களும், அளந்து பேசுபவர்களும், காமம், சினம், வெறுப்பு முதலிய குணங்களிலிருந்து விடுபட்டவர்களும், தங்கள் புலன்களை வென்றவர்களும், சதாசாரத்தில் நிலைபெற்றவர்களும்தான் குருமார் ஆவர்.

**ஸுசகாதிப்ரபேதேன குரவோ பஹுதா ஸ்மிருதா : |**
**ஸ்வயம் ஸம்யக் பரீக்ஷ்யார்த்தம் தத்வநிஷ்டம் பஜேத்ஸுதி: || 272 ||**

272. வெவ்வேறு திறமைகளைக் கொண்ட பல்வகை குருமார்கள் உளர். ஸுசகர் முதலிய பெயர்கள் அவர்களுக்கு உண்டு. ஆத்ம ஞானத்தில் நிலைபெற்ற ஒருவரைத் தெரிந்தெடுத்து சிஷ்யன் குருவாக ஏற்க வேண்டும்.

குறிப்புகள் : ஸுசக குரு யார் என்பது அடுத்த சுலோகத்தில் தெரிவிக்கப்படுகிறது.

**வர்ணஜாலமிதம் தத்வத்பாஹ்யசாஸ்த்ரம் து லௌகிகம் |**

**யஸ்மின் தேவி ஸமப்யஸ்தம் ஸ குரு: ஸுசக : ஸ்மிருத :**
**॥ 273 ॥**

273. அறிவிற் தேர்ந்தவரும், லௌகிக விஞ்ஞானத்தில் தேர்ச்சி பெற்றவரும் எவரோ அவரே ஸுசகர்.

**வர்ணாசிரமோசிதாம் வித்யாம் தர்மாதர்ம விதாயினீம் ।**
**பிரவக்தாரம் குரும் வித்தி வாசகம் த்விதி பார்வதி ॥ 274॥**

274. பார்வதி! பல்வேறு வர்ணங்கள் மற்றும் ஆசிரமங்கள் அவர்களது கடமைகள் தர்ம அதர்மங்கள் ஆகியவை பற்றியும் தெளிவாக எடுத்துரைப்பவர் வாசக குரு எனப்படுகிறார்.

**பஞ்சாக்ஷர்யாதி மந்த்ராணாமுபதேஷ்டா து பார்வதி ।**
**ஸ குருர்போதகோ பூயாதுபயோரயமுத்தம: ॥ 275 ॥**

275. பஞ்சாக்ஷரம் போன்ற மந்திரங்களை சீடனுக்கு உபதேசிக்கும் குரு போதக வகையைச் சேர்ந்தவராவார். இவர் ஸுசகரைக் காட்டிலும் மேலானவர்.

**மோஹமாரணவச்யாதிதுச்ச மந்த்ரோபதர்சினம் ।**
**நிஷித்த குரு ரித்யாஹு: பண்டிதாஸ் தத்வதர்சின: ॥ 276 ॥**

276. மோஹனம், மரணம், வசியம், உச்சாடனம் போன்ற கீழான வித்தைகளைப் புகட்டும் ஒருவரை நிஷித்த குரு என்று உண்மையை உணர்ந்த பண்டிதர்கள் கூறுகின்றனர்.

**அநித்யமிதி நிர்திச்ய ஸம்ஸாரம் ஸங்கடாலயம் ।**
**வைராக்யபததர்சீ ய: ஸ குருர்விஹித: ப்ரியே ॥ 277 ॥**

277. ''இங்குள்ளது அனைத்தும் அநித்தியமானவை. துக்கம் தருபவை'' - என்று இந்த உலகை துக்கமயமாகக்

கண்டு, வைராக்கியத்திற்கான வழியைக் காண்பிப்பவர் விஹித குரு எனப்படுகிறார்.

**தத்வமஸ்யாதி வாக்யானாமுபதேஷ்டா து பார்வதி |**
**காரணாக்யோ குரு: ப்ரோக்தோ பவரோக நிவாரக:**
**|| 278 ||**

278. சீடனுக்கு தத்வமஸி போன்ற மகாவாக்கியங்களில் உபதேசமளிக்கும் குரு காரண குரு எனப்படுகிறார். அவர் சீடனிடம் உள்ள சம்சாரப் பிணியை அகற்றுகிறார்.

**ஸர்வஸந்தேஹஸந்தோஹ நிர்மூலன விசக்ஷண: |**
**ஜன்மம்ருத்யுபயக்னோ ய: ஸ குரு: பரமோ மத: || 279 ||**

279. அனைத்து சந்தேகங்களையும் அக்கு வேறு ஆணி வேறாகப் போக்க வல்ல திறமை படைத்தவரும், ஜன்ம மரண பயத்தைப் போக்கவல்லருமானவர் பரமகுரு எனப்படுகிறார்.

**பஹுஜன்மக்ருதாத் புண்யால்லப்யதே அஸௌ மஹாகுரு: |**
**லப்த்வா அமும் ந புனர்யாதி சிஷ்ய: ஸம்ஸாரபந்தனம்**
**|| 280 ||**

280. பல ஜன்மங்களில் செய்த புண்ணியத்தின் பலனாகவே ஒருவர் இத்தகைய குருமாரை அடைகிறார். இத்தகைய குருவை அடைந்த ஒரு சீடன் திரும்பப் பிறப்பதில்லை. அவன் முக்தபுருஷனாகிறான்.

**ஏவம் பஹுவிதா லோகே குரவ: ஸந்தி பார்வதி |**
**தேஷு ஸர்வப்ரயத்னேன ஸேவ்யோ ஹி பரமோ குரு:**
**|| 281 ||**

281. பார்வதி! இவ்வுலகில் பல்வகை குருமார்கள் உளர். அவர்களுள் பரமகுருவை அடைந்து ஒருவன் தொண்டு புரிய வேண்டும். அவர் தொண்டு புரிதற்குரியவர்.

*நிஷித்த குருசிஷ்யஸ்து துஷ்டஸங்கல்ப தூஷித: |*
*ப்ரம்மப்ரளய பர்யந்தம் ந புனர்யாதி மர்த்யதாம் || 282 ||*

282. தீய குணங்களுடன் பொல்லாத சுபாவத்தால் தூண்டப்பட்ட நிஷித்த குரு ஒருவரின் சீடன் பிரம்மப் ரளயம் முடியும் வரை மனிதப் பிறவியை அடைவதில்லை.

குறிப்புகள்: இரண்டு லட்சம் தேவவர்ஷத்தின் முடிவில் பிரம்மப்ரளயம் நிகழ்கிறது.

*ஏவம் ச்ருத்வா மஹாதேவி மஹாதேவ வசஸ்ததா |*
*அத்யந்த விஹ்வலமனா சங்கரம் பரிப்ருச்சதி || 283 ||*

283. மஹாதேவனின் இந்த வார்த்தைகளைக் கேட்டு பெரிதும் கலங்கிய மனத்துடன் மஹாதேவி கேட்டாள்.

*பார்வத்யுவாச:*

*நமஸ்தே தேவதேவாத்ர ச்ரோதவ்யம் கிஞ்சிதஸ்தி மே |*
*ச்ருத்வா த்வத்வாக்யமதுனா ப்ருசம் ஸ்யாத் விஹ்வலம் மனக் || 284 ||*

284. "தேவா! நான் உம்மை வணங்குகின்றேன். உம்மிடம் நான் கேட்க வேண்டியதொன்றுளது. உமது வார்த்தைகளைக் கேட்டு எனது மனம் பெரிதும் கலக்கமும் வருத்தமும் உறுகிறது.

*ஸ்வயம் மூடா ம்ருத்யுபீதா :ஸுக்ருதாத்விரதிம் கதா: |*
*தைவான் நிஷித்த குருகா யதி தேஷாம் து கா கதி: ||285||*

285. நிஷித்த குருவை விதிவசத்தால் பெற்ற சீடர்களின் கதியைப் பற்றி நான் அறிய விரும்புகிறேன். அவர்களிடம் இயற்கையாக விவேகம் கிடையாது. ஆனால்

அவர்கள் செய்த புண்ணியச் செயல்களால் விரக்தியை அடைந்து, மரணத்தைக் கண்டு அஞ்சுகின்றனர்.

*ஸ்ரீ மஹாதேவ உவாச ।*

**ச்ருணு தத்வமிதம் தேவி யதா ஸ்யாத் விரதோ நர: ।**
**ததாவஸாவதிகாரீதி ப்ரோச்யதே ச்ருதிமஸ்தகை: ॥ 286 ॥**

286. "தேவி! இந்த உண்மையைக் கேள். உலக இன்பங்கள் மீதும் இல்லற வாழ்வின் மீதும் ஒருவனுக்கு எப்பொழுது வைராக்யம் பிறக்கிறதோ, அவன் தகுதியுள்ள மாணவன் (அதிகாரி) என்று ச்ருதிகள் சொல்கின்றன", என்று மஹாதேவன் கூறினார்.

**அகண்டைகரஸம் ப்ரம்ம நித்ய முக்தம் நிராமயம் ।**
**ஸ்வஸ்மின் ஸந்தர்சிதம் யேன ஸ பவேதஸ்ய தேசிக: ॥ 287 ॥**

287. நித்தியமானதும், துன்பத்திலிருந்து விடுபட்டதும், அறியாததுமான பிரம்மத்தை தனக்குள்ளேயே காண்பதற்கு எவர் சீடனுக்கு உதவியாயிருக்கிறாரோ அவரே அவனது குருவாயமைகிறார்.

**ஜலானாம் ஸாகரோ ராஜா யதா பவதி பார்வதி ।**
**குரூணாம் தத்ர ஸர்வேஷாம் ராஜாயம் பரமோகுரு : ॥ 288 ॥**

288. கடல், நீர்நிலைகளின் அரசனாகத் திகழ்வது போல, இத்தகைய குரு, குருமார்களில் சிறந்த பரம குருவாகத் திகழ்கிறார்.

**மோஹாதிரஹித: சாந்தோ நித்யத்ருப்தோ நிராச்ரய: ।**
**த்ருணீக்ருத ப்ரம்ம விஷ்ணு வைபவ: பரமோ குரு: ॥289॥**

289. மோஹம் நீங்கியவரும், என்றும் திருப்தியுடன், எவரையும் சார்ந்திராமல், அமைதியுடன் திகழ்பவரும், பிரம்மா மற்றும் விஷ்ணுவின் நிலைமையைக் கூட தூசுக்கு நிகராக மதிப்பவரே பரமகுரு ஆவார்.

**ஸர்வகால விதேசேஷு ஸ்வதந்த்ரோ நிஸ்சலஸ்ஸுகீ**
**அகண்டைகரஸாஸ்வாத த்ருப்தோ ஹி பரமோ குரு:**
**॥ 290 ॥**

290. எப்பொழுதும் சுதந்திரமாயிருப்பவரும், அசையாத மனத்துடன் யாண்டும் சந்தோஷமாயிருப்பவரு ஆத்மனின் ஆனந்தத்தில் லயித்திருப்பவரும் எவரோ அவரே பரமகுரு.

**த்வைதாத்வைதவிநிர்முக்த: ஸ்வானுபூதிப்ரகாசவான் ।**
**அக்ஞானாந்ததமஸ்சேத்தா ஸர்வக்ஞ பரமோ குரு: ॥291॥**

291. த்வைதம், அத்வைதம் என்ற உணர்வுகளிலிருந்து விடுபட்டவரும், ஆத்ம போதத்தால் பிரகாசிப்பவரும், அறியாமை இருளை அகற்ற வல்லவரும், அனைத்தையும் அறிந்தவருமாக எவர் விளங்குகிறாரோ அவரே பரமகுரு.

**யஸ்ய தர்சன மாத்ரேண மனஸ : ஸ்யாத் ப்ரஸன்னதா ।**
**ஸ்வயம் பூயாத் த்ருதிஸ்சாந்தி: ஸ பவேத் பரமோ குரு:**
**॥ 292 ॥**

292. எவரைத் தரிசனம் செய்த மாத்திரத்திலேயே ஒருவன் அமைதி, மகிழ்ச்சி, மற்றும் அடக்கத்தையும் அடைகிறானோ அவரே பரமகுரு.

**ஸித்திஜாலம் ஸமாலோக்ய யோகினாம் மந்த்ரவாதினாம் ।**
**துச்சாகார மனோவ்ருத்திர்யஸ்யாஸௌ பரமோ குரு:**
**॥ 293 ॥**

293. யோகிகளின் சித்து விளையாட்டுகள் மற்றும் மந்திரவாதிகளின் மாயாஜாலங்களையும் கண்டு

'இவையனைத்தும் குப்பைக்கு நிகர்' என்று எவர் ஒதுக்கித் தள்ளுகிறாரோ அவரே பரமகுரு.

**ஸ்வசரீரம் சவம் பச்யன் ததா ஸ்வாத்மான மத்வயம் ।**
**ய: ஸ்திரீகநக மோஹக்ன: ஸ பவேத் பரமோ குரு: ॥294॥**

294. தனது உடலை சவமாகவும், தன்னையே இரண்டற்ற பிரம்மனாகவும் எவர் பார்க்கிறாரோ, பெண் மற்றும் பொன்னுக்கான நாட்டத்தை அடியோடு ஒழித்தவர் எவரோ அவரே பரமகுரு.

**மௌனீ வாக்மீதி தத்வக்ஞோ த்விதா பூச்ருணு பார்வதி ।**
***ந கஸ்சின் மௌனினா லாபோ லோகே அஸ்மின் பவதி ப்ரியே ॥ 295 ॥***

295. பார்வதி! நான் சொல்வதைக் கேள். இரண்டு வகையான தத்வக்ஞர்கள் (மெய்உணர்ந்தவர்கள்) உண்டு. மௌனீ, வாக்மீ என்பவர்களே அவர்கள்.

குறிப்புகள் : மௌனீயினால் இந்த உலகில் யாருக்கும் எந்தவித நன்மையும் கிடையாது. ஏனெனில் அவன் பேசாமல் இருப்பதால் அவன் யாருக்கும் போதிப்பது கிடையாது. ஆத்மாவில் லயித்திருப்பதால் அவன் பேசுவதோ அல்லது பிறருக்கு உதவுவதோ கிடையாது.

**வாக்மீ தூத்கடஸம்ஸார ஸாகரோத்தாரணக்ஷம: ।**
**யதோஅஸௌ ஸம்சயச்சேத்தா சாஸ்த்ர யுக்த்யனுபூதிபி: ॥ 296 ॥**

296. ஆனால் வாக்மீ பிறரை ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்குவதிலிருந்து காப்பாற்றவல்லவர். அனைவரது ஐயங்களையும் அவர் தமது சாஸ்திர ஞானத்தால் அகற்றவல்லவர். அவரது வாதங்கள் ஆணித்தரமானவை. அவரது ஆத்மஞானத்திலிருந்து உதித்தவை.

குறிப்பு : இந்தக் கருத்தைத் தெளிவாக்குவதற்கு ஸ்ரீ சங்கர விஜயத்தில் அதி 4 - சுலோகம் 60 - 'அக்ஞானந்தர்கஹன பதிதான்' என்ற பகுதியைப் பார்க்கவும்.

**குருநாம ஜபாத்தேவி பஹுஜன்மர் ஜிதான்யபி /**
**பாபானி விலயம் யாந்தி நாஸ்தி ஸந்தேஹமண் வபி**
**// 297 //**

297. தேவி! எண்ணற்ற பிறவிகளில் பெறப்பட்டுள்ள பாபங்கள் குருநாம ஜபத்தினால் போக்கடிக்கப்படுகின்றன. இதில் எள்ளளவும் சந்தேகம் கிடையாது.

**ஸ்ரீ குரோஸ்ஸத்ருசம் தைவம் ஸ்ரீ குரோஸ்ஸத்ருச: பிதா /**
**குருத்யானஸமம் கர்ம நாஸ்தி நாஸ்தி மஹீதலே // 298 //**

298. இவ்வுலகில் குருவுக்கீடாக கடவுளும், குருவைப்போன்ற தந்தையும் கிடையாது. குருவை தியானம் செய்வதற்கீடான செயலும் கிடையாது. ஐயமின்றி இதற்கிணையான காரியம் வேறு எதுவும் கிடையாது.

**குலம்தனம் பலம் சாஸ்த்ரம் பாந்தவாஸ் ஸோதரா இமே /**
**மரணே நோபயுஜ்யந்தே குருரேகோ ஹி தாரக : // 299 //**

299. மரண காலத்தில் குலம், செல்வம், ஆற்றல், சாஸ்திர ஞானம், உற்றார், சகோதரர்கள் இவை எதுவும் உங்களுக்குப் பயன்படமாட்டா. குரு ஒருவரே உங்களைக் காப்பவர்.

**குலமேவ பவித்ரம் ஸ்யாத் ஸத்யம் ஸ்வகுரு ஸேவயா /**
**த்ருப்தா க ஸ்யு ஸ்ஸாகலா தேவா ப்ரம்மாத்யா குருதர்பணாத்**
**// 300 //**

300. குருசேவையினால் குலம் முழுவதுமே தூய்மையாக்கப்படுகிறது. குருவைத் திருப்தி செய்வதால்

எல்லா தேவர்களும், பிரம்மா, விஷ்ணு, சிவன் முதலானவர்களும் திருப்தி அடைகிறார்கள்.

**குருரேகோ ஹி ஜானாதி ஸ்வரூபம் தேவமவ்யயம் |**
**தத்ஜ்ஞானம் தத்ப்ரஸாதேன நான்யதா சாஸ்த்ர கோடிபி :**
**||301||**

*301.* இறைவனின் உண்மை சொரூபத்தை அறிந்தவர் குரு ஒருவரே. பரம்பொருளைப் பற்றிய ஞானம் குரு கிருபையால் தான் கிட்டும். இதற்கு வேறு வழியே இல்லை. இந்த ஞானத்தை கோடிக்கணக்கான சாஸ்திரங்களாலும் கூட ஒருவன் பெற முடியாது.

குறிப்புகள் : அவ்யயம் என்றால் மாற்றமற்றது என்று பொருள். பிரம்மம் மாயையைக் கடந்தது.

**ஸ்வரூபஞானசூன்யேன க்ருதமப்யக்ருதம் பவேத் |**
**தபோ ஜபாதிகம் தேவி ஸகலம் பால ஜல்பவத் || 302 ||**

*302.* ஆத்மஞானம் இன்றி எது செய்தாலும் அது பயனற்றதுதான். தேவி! தவம், மந்திரஜபம் இவையனைத்தும் குழந்தையின் கூக்குரலுக்கு நிகர்.

**சிவம் கேசித்ஹரிம் கேசித்விதிம் கேசித்து கேசன |**
**சக்திம் தேவமிதி க்ஞாத்வா விவதந்தி வ்ருதா நரா:||303||**

*303.* சிவனே பெரும் தெய்வம் என்று சிலரும், ஹரியே மேலானவர் என்று வேறு சிலரும் சொல்லுகின்றனர். மற்றும் சிலர் இவை அனைத்தும் பிரம்மா என்றும், வேறு சிலர் இது சக்தியின் லீலை என்றும் சொல்லுவர். பல்வேறு கொள்கைகளுடன் அவர்கள் குறிக்கோள் இன்றி தர்க்கம் செய்கின்றனர்.

**ந ஜானந்தி பரம் தத்வம் குருதீக்ஷா பராங்முகா : |**
**ப்ராந்தாம் பசுஸமா ஹ்யேதே ஸ்வபரிக்ஞான வர்ஜிதா:**
**|| 304 ||**

304. குருதீக்ஷையில் நாட்டம் இல்லாதவர்கள் மேலாம் உண்மையை ஒருபோதும் உணரமாட்டார்கள். அவர்கள் மிருகங்களைப் போன்றவர்கள். ஆத்ம ஞானமின்றி பைத்தியங்கள் போலத் திரிபவர்கள்.

**தஸ்மாத் கைவல்ய ஸித்த்யர்த்தம் குருமேவ பஜேத் ப்ரியே**
**குரும் வினா ந ஜானந்தி மூடாஸ் தத்பரமம் பதம் // 305 //**

305. பார்வதி! பிறப்பிறப்புச் சக்கரத்திலிருந்து விடுபட ஒருவன் அவனது குருவை வணங்க வேண்டும். குரு இன்றி உலகியலில் அழுந்திய மூடர்கள் பரம் பொருளை உணர மாட்டார்கள்.

**பித்யதே ஹ்ருதயக்ரந்திஸ் சித்யந்தே ஸர்வ ஸம்சயா: /**
**க்ஷீயந்தே ஸர்வகர்மாணி குரோ : கருணயா சிவே //306//**

306. இருதய முடிச்சுகள் யாவும் அவிழ்கின்றன. அனைத்துக் கர்மங்களும் இல்லாதாகின்றன. அனைத்து ஐயங்களும் தெளிவாகின்றன. எல்லாம் குரு கிருபையாலும், குருவின் கருணையாலும் தேவி!

**க்ருதாயா குருபக்தேஸ்து வேத சாஸ்த்ரானுஸாரதம் /**
**முச்யதே பாதகாத்கோராக்குருபக்தோ விசேஷத: // 307 //**

307. வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் சொல்லப் பட்டபடி அனுசரிக்கப்பட்ட குருபக்தியானது ஒருவனை அனைத்து கோர பாபங்களிலிருந்தும் விடுவிக்கவல்லது.

**து:ஸங்கம் ச பரித்யஜ்ய பாபகர்மம் பரித்யஜேத் /**
**சித்தசின்னமிதம் யஸ்ய தஸ்ய தீக்ஷா விதீயதே // 308 //**

308. தீயார் தொடர்பை விட்டவனும், பாபச் செயல் களிலிருந்து நீங்கியவனும், பாபங்களிலிருந்து நீங்கிய இதயத்தை உடையவனும் எவனோ அவனே குருதீட்சை பெறத் தகுதி உடையவன் ஆவான்.

*சித்தத்யாக நியுக்தஸ்ச க்ரோத கர்வ விவர்ஜித:।*
*த்வைத பாவ பரித்யாகீ தஸ்ய தீக்ஷா விதீயதே ॥ 309 ॥*

*309.* தியாகத்தில் நிலைத்த இதயம் கொண்டவனும், கோபம் மற்றும் கர்வத்திலிருந்து விடுபட்டவனும், எல்லாவித இரட்டை உணர்ச்சிகளிலிருந்தும் விடுபட்டவன் எவனோ அவனே தீட்சைபெறத் தகுதி உள்ளவன்.

*ஏதல் லக்ஷண ஸம்யுக்தம் ஸர்வபூதஹிதேரதம் ।*
*நிர்மலம் ஜீவிதம் யஸ்ய தஸ்ய தீக்ஷா விதீயதே ॥ 310 ॥*

*310.* இந்தக் குணங்கள் அனைத்தும் வாய்க்கப் பெற்றவனும், உலகில் உள்ள உயிர்கள் அனைத்தினுடைய நலத்தை விரும்புபவனும், எவனது வாழ்வு தூய்மையுடனும் கறையற்றும் விளங்குகிறதோ அவனே சாஸ்திரங்களால் தீட்சை பெறத் தகுந்தவன் எனப்படுகிறான்.

*க்ரியயா சான்விதம் பூர்வம் தீக்ஷாஜாலம் நிரூபிதம் ।*
*மந்த்ரதீக்ஷாபிதம் ஸாங்கோபாங்க ஸர்வம் சிவோதிதம்*
*॥ 311 ॥*

*311.* (சிவன் பார்வதியிடம்) மந்திர தீட்சைக்குரிய சடங்கு முறைகளுடன் கூடிய தீட்சை முறைக்கான அனைத்து அம்சங்களும் என்னால் விரிவாக விளக்கப்பட்டிருக்கிறது.

*க்ரியயா ஸ்யாத்விரஹிதாம் குருஸாயுஜ்யதாயினீம் ।*
*குருதீக்ஷாம் வினா கோ வா குருத்வாசாரபாலக: ॥ 312 ॥*

*312.* குருதீட்சை இன்றி, உரிய சடங்கு முறைகள் இன்றி குரு ஸாயுஜ்யத்தை அளிக்கவல்ல குரு தத்துவத்தை கடைப்பிடிப்பவர் என்று யாரைச் சொல்ல முடியும்?

*சக்தோ ந சாபி சக்தோ வா தைசிகாங்ரிஸமாச்ரயாத்!*

*தஸ்ய ஜன்மாஸ்தி ஸபலம் போகமோக்ஷபலப்ரதம் || 313 ||*

313. தகுதியிருக்கிறதோ இல்லையோ, குருவிடம் அபார பக்தியும் தொண்டும் இணைந்து குருவை அடைக்கலம் புகுகின்றவன் மோட்சத்திற்கும், இவ்வுலகில் அனைத்து இன்பங்களைப் பெறுவதற்கும் தகுதி உள்ளவனாகிறான். இத்தகைய சீடனின் வாழ்க்கை பயனுடையதாகிறது.

**அத்யந்த சித்த பக்வஸ்ய ச்ரத்தா பக்தி யுதஸ்ய ச |**
**ப்ரவக்தவ்யமிதம் தேவி மமாத்மப்ரீதயே ஸதா || 314 ||**

314. பார்வதி! குருவிடம் அபார பக்தியும் சிரத்தையும் கொண்டவன் எவனோ அவனிடமே இந்த ரகசியம் வெளியிடப்பட வேண்டும். இது எனக்கு மிக உயர்ந்த திருப்தியையும், மகிழ்ச்சியையும் அளிக்கிறது.

**ரஹஸ்யம் ஸர்வசாஸ்த்ரேஷு கீதாசாஸ்த்ரமிதம் சிவே |**
**ஸம்யக்பரீக்ஷ்ய வக்தவ்யம் ஸாதகஸ்ய மஹாத்மன: || 315 ||**

315. இந்த குருகீதா சாஸ்திரம் அனைத்து மறைநூல்களின் சாரமாகும். பார்வதி! உரிய விதத்தில் பரீட்சை செய்த பின் உயர்ரக சாதகனுக்கு இது தெரிவிக்கப்படவேண்டும்.

**ஸத்கர்மபரிபாகாச்ச சித்தசுத்தஸ்ய தீமத: |**
**ஸாதகஸ்யைவ வக்தவ்யா குருகீதா ப்ரயத்னத: || 316 ||**

316. அறிவுடையார், சித்தசுத்தி உடையார், அனைத்து நல்லியல்புகளும் வாய்க்கப் பெற்றவர் இத்தகைய தகுதி உடைய சாதகனுக்கே குருகீதை வெகு முயற்சியுடன் சொல்லப்பட வேண்டும்.

**நாஸ்திகாய க்ருதக்னாய தாம்பிகாய சடாயச |**
**அபக்தாய விபக்தாய ந வாச்யேயம் கதாசன || 317 ||**

*317.* நாஸ்திகன், ஏமாற்றுக்காரன், நலம் விரும்பு வனுக்கு தீங்கு செய்பவன், தந்திரக்காரன், பொய்யன், வஞ்சகன், பக்தி இல்லாதவன், குருவை எதிர்ப்பவன் - இத்தகையோருக்கு குருகீதை சொல்லப்படக் கூடாது.

**ஸ்திரீலோலுபாய மூர்க்காய காமோபஹுத சேதஸே ।**
**நிந்தகாய ந வக்தவ்யா குரு கீதா ஸ்வபாவத: ।। 318 ।।**

*318.* பெண் விரும்பிகள், மூர்க்கர்கள், காமம் மிகுந்தவர்கள், தீயவர்கள், ஆசைகளால் நிறைந்த மனதுடையவர்கள், மற்றும் குருவை நிந்திப்பவர்கள்பால் குருகீதை ஒருபோதும் சொல்லப்படக் கூடாது.

**ஸர்வ பாபப்ரசமன ஸர்வோபத்ரவவாரகம் ।**
**ஜன்மம்ருத்யுஹரம் தேவி கீதாசாஸ்திரமிதம் சிவே ।। 319।।**

*319.* தேவி! இந்த கீதா சாஸ்திரம் எல்லாப் பாபங்களையும், எல்லா விக்னங்களையும், தீமைகளையும் போக்கவல்லது. பிறப்பு இறப்பு பயத்தையும் அது போக்குகிறது.

**ச்ருதிஸாரமிதம் தேவி ஸர்வமுக்தம் ஸமாஸத: ।**
**நான்யதாஸத்கதி : பும்ஸாம் வினா குருபதம் சிவே ।।320।।**

*320.* தேவி! எல்லா சுருதிகளின் சாரம் இதுவே. அனைத்தும் சுருக்கமாக இங்கே சொல்லப்பட்டிருக்கிறது. சத்குருவின் பாதங்களில் பக்தி செலுத்தினாலன்றி மக்களுக்கு முக்திக்கான மார்க்கம் வேறு இல்லை.

**பஹுஜன்மக்ருதாத் பாபாதய மர்த்தோ ந ரோசதே ।**
**ஜன்மபந்த நிவிருத்யர்த்தம் குருமேவ பஜேத்ஸதா ।। 321 ।।**

*321.* எண்ணற்ற பிறவிகளில் செய்த பாவச் சுமை ஒருவனைக் கீழே அழுத்துகையில் குருகீதையின் உண்மைத் தத்துவம் ஒருவனுக்கு விளங்காது. ஜனன

மரணச்சிக்கலிலிருந்து ஒருவன் தன்னை விடுவித்துக் கொள்ள வேண்டுமானால், யாண்டும் அவன் குருவை போற்ற வேண்டும்.

*அஹமேவ ஜகத்ஸர்வம் அஹமேவ பரம்பதம் |*
*ஏதத்ஞானம் யதோ பூயாத்தம் குரும் ப்ரணமாம்யஹம்*
*|| 322 ||*

*322.* நானே இந்த ஜகம் அனைத்தும், நானே மேலான நிலை. எவரிடமிருந்து இத்தகைய ஞானம் ஒருவனுக்குக் கிடைக்கப் பெறுகிறதோ அந்த குருவை நான் வணங்குகிறேன்.

*அலம் விகல்பைரஹமேவ கேவலோ*
*மயி ஸ்திதம் விச்வமிதம் சராசரம் |*
*இதம் ரஹஸ்யம் மம யேன தர்சிதம்*
*ஸ வந்தனீயோ குருமேவ கேவலம் || 323 ||*

*323.* "அலைந்தது போதும், உண்மையில் நான் மட்டுமே இருக்கிறேன். அசையும் மற்றும் அசையாப் பொருள்கள் யாவும் என்னிடமே உள்ளன". இந்த ரகசியத்தை எந்த குரு என்னிடம் வெளிப்படுத்தினாரோ அவரை நான் யாண்டும் வணங்குகிறேன்.

*யஸ்யாந்தம் நாதி மத்யம் நஹி*
*கரசரணம் நாமகோத்ரம் ந ஸூத்ரம் |*
*நோ ஜாதிர்நைவ வர்ணோ ந பவந்தி*
*புருஷோ நோ நபும்ஸம் ந ச ஸ்திரீ || 324 ||*
*நாகாரம் நோ விகாரம் நஹி ஜனிமரணம் நாஸ்தி புண்யம் பாபம் |*
*நோ அதத்வம் தத்வமேகம் ஸஹஜஸமரஸம் ஸத்குரும்தம்*
*நமாமி || 325 ||*

325. ஆதியும் அந்தமும் நடுவும் அற்றவர் எவரோ, கைகள், கால்கள், ஜாதி மற்றும் கோத்திரம் அற்றவர் எவரோ, ஆண், பெண், அல்லது அலி அற்றவர் எவரோ, பிறப்பு , இறப்பு, குணம், மாற்றம், தீமை அற்றவர் எவரோ, யாண்டும் ஒரேபோல விளங்கும் தத்துவம் எவரோ, இயற்கையான சமத்துவ பாவத்துடன் விளங்கும் அந்த ஸத்குருவை நான் வணங்குகிறேன்.

குறிப்புகள் : உண்மையில் குரு அனைத்து இரட்டைகளுக்கும் அப்பாற்பட்டவர். அவரே பரப்பிரம்மன், அனைத்து மனித குணங்களுக்கும் அப்பாற்பட்டவர் அவர். எப்பொழுதும் பிரம்மானந்தத்தில் திளைத்திருப்பவர் அவர்.

**நித்யாய ஸத்யாய சிதாத்மகாய நவ்யாய பவ்யாய பராத்பராய।**
**சுத்தாய புத்தாய நிரஞ்சனாய நமோ அஸ்து நித்யம்**
**குருசேகராய** *II 326 II*

326. நித்தியமானவரும், ஸத்யமானவரும், அறிவு சொரூபமானவரும், எப்பொழுதும் புதியதாயிருப்பவரும், சிறந்து விளங்குபவரும், தூய்மையானவரும், ஞானம் பெற்றவரும், பற்றற்றவரும் ஆக விளங்கும் குருமார்களில் தலைசிறந்து விளங்கும் குருசேகரருக்கு எனது வணக்கங்கள்.

**ஸச்சிதானந்த ரூபாய வ்யாபினே பரமாத்மனே ।**
**நம : ஸ்ரீ குருநாதாய ப்ரகாசானந்த மூர்த்தயே** *II 327 II*

327. ஒளி மற்றும் ஆனந்தமயமான சச்சிதானந்த ரூபியான எங்கும் நிறை பரமாத்ம சொரூபியான ஸ்ரீ குருநாதனை நான் வணங்குகின்றேன்.

**ஸத்யானந்த ஸ்வரூபாய போதைக ஸுககாரிணே ।**
**நமோ வேதாந்தவேத்யாய குரவே புத்தி ஸாக்ஷிணே**
*II 328 II*

*328.* வேதாந்தத்தை உணர்ந்தவரும், ஸத்யம் மற்றும் ஆனந்தத்தின் வடிவமானவரும், அறிவு மற்றும் சுகத்தின் இருப்பிடமானவரும் என் அறிவின் சாட்சியானவருமான அந்த குருவை நான் வணங்குகிறேன்.

**நமஸ்தே நாத பகவன் சிவாய குருரூபிணே /**
***வித்யாவதார ஸம்ஸித்த்யை ஸ்வீக்ருதானேகவிக்ரஹ   //329//***

*329.* ஹே பகவான்! குரு வடிவில் உள்ள சிவனுக்கு வணக்கம். உலகில் கல்வியைப் பரப்புவதற்காக நீர் பல வடிவங்களை எடுக்கிறீர்.

**நவாய நவரூபாய பரமார்த்தைக ரூபிணே /**
**ஸர்வாக்ஞானதமோ பேதபானவே சித்கனாய தே // 330//**

*330.* எப்பொழுதும் புதிதாயிருப்பதும், தமது மாயா சக்தியால் எவர் புதுப்புது வடிவங்களில் தோன்றினாலும், உண்மையில் பரமார்த்த ரூபத்திலேயே இருப்பவரும், தூய உணர்வு அல்லது ஆன்மீக ஒளியாய்த் திகழ்பவரும், அனைத்து அறியாமையையும் அழிக்கும் சூரியனாக விளங்கும் அந்த குருநாதருக்கு நமஸ்காரம்.

**ஸ்வதந்த்ராய தயாக்லுப்த விக்ரஹாய சிவாத்மனே /**
**பரதந்த்ராய பக்தானாம் பவ்யானாம் பவ்யரூபிணே**
**// 331 //**

**விவேகினாம் விவேகாய விமர்சாய விமர்சினாம்/**
**ப்ரகாசினாம் ப்ரகாசாய ஞானினாம் ஞானரூபிணே**
**// 332 //**

**புரஸ்தாத் பார்ச்வயோ : ப்ருஷ்டே நமஸ்குர்யாதுபர்யத: /**
**ஸதா மச்சித்தரூபேண விதேஹி பவதாஸனம் // 333 //**

*331, 332, 333.* ஸ்வதந்திரமானவரும், தயை வடிவமானவரும், சிவஸ்வரூபமானவரும், பக்தர்களின் ரட்சகரும், பக்தர்களை அண்டியிருப்பவரும், மிக அழகிய தோற்றம்

உடையவரும், விவேகிகளின் விவேகமானவரும், பிரம்ம விசாரம் செய்பவர்களின் விசாரணையாயிருப்ப வரும், பரம ஜோதியாயிருப்பவரும், ஒளியை நாடுபவர்களின் ஒளியாயிருப்பவரும், ஆத்மஞானிகளின் ஞானமாயிருப் பவருமாகிய, அத்தகையவருக்கு மேலும், கீழும், முன்னும், பின்னும் எனது வணக்கங்கள் உரித்தாகுக. யாண்டும் என் இதயத்தில் நீர் வாசம் செய்வீராக.

**ஸ்ரீ குரும் பரமானந்தம் வந்தே ஹ்யானந்தவிக்ரஹம் ।**
**யஸ்ய ஸந்நிதி மாத்ரேண சிதானந்தாய தே நம: ॥ 334 ॥**

*334.* பரமானந்த மயமானவரும், ஆனந்தமே வடிவெடுத்தவரும், எவரது முன்னிலையில் மனமானது தூய அறிவு மற்றும் ஆனந்த சொரூபத்தைத் தாங்குகிறதோ அந்த குருவிற்கு நமஸ்காரம்.

**நமோஅஸ்து குரவே துப்யம் ஸஹஜானந்தரூபிணே ।**
**யஸ்ய வாகமிருத ஹந்தி விஷம் ஸம்ஸாரஸம்ஞகம் ॥335॥**

*335.* குருவே! இயற்கையான ஆனந்தத்தில் யாண்டும் லயித்திருப்பவரும், எவரது அமிருதமயமான பேச்சு ஸம்ஸாரமெனும் விஷத்தை இல்லாதாக்குகிறதோ அந்த பரம்பொருளுக்கு எனது நமஸ்காரம்.

**நானாயுக் தோபதேசேன தாரிதா சிஷ்யஸந்ததி: ।**
**தத்க்ருபாஸாரவேதேன குருசித்பத மச்யுதம் ॥ 336 ॥**

*336.* எண்ணற்ற வழிமுறைகளால் உமது சீடக் குழந்தைகள் யாவரும் காப்பாற்றப்பட்டுள்ளனர். உமது பரம கருணையால் அழியாத குருசித்பதத்தை நீர் அவர்களுக்கு அருளியுள்ளீர்.

**அச்யுதாய நமஸ்துப்யம் குரவே பரமாத்மனே ।**
**ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ராய சித்கனானந்த மூர்த்தயே ॥337॥**

337. குருவே! நீரே பரமாத்மன். நீரே அச்யுதன். அனைத்து சாஸ்திரங்களையும் கற்றவர் நீர். அறிவு மற்றும் ஆனந்த ரூபி நீர். உமக்கு நமஸ்காரம்.

குறிப்புகள் : இங்கு தந்திரம் என்பது சாஸ்திரங்களைக் குறிப்பிடுகிறது. ஸ்வதந்திரம் என்பது அறிஞர் என்பதைக் குறிக்கிறது.

ஏனெனில் அனைத்து சாஸ்திர ஞானமும் அவருக்கு உரியதாய் விளங்குகிறது.

**நமோ அச்யுதாய குரவே வித்யா வித்யா ஸ்வரூபிணே |**
**சிஷ்ய ஸன்மார்கபடவே க்ருபாபீயூஷ ஸிந்தவே || 338 ||**

338. குருவே உமக்கு நமஸ்காரம். நீர் அச்யுதன். உமது வடிவம் வித்தை மற்றும் அவித்தையாகும். உமது சி டர்களை நீர் நேரிய மார்க்கத்தில் இட்டுச்செல்ல வல்லவர். நீர் கருணைக்கடல்.

குறிப்புகள் : இந்த சுலோகத்தின் முதல் வரியின் பிற்பகுதி கீழ்வருமாறும் உள்ளது : *"அக்ஞானத்வந்தை கபானவே"* அறியாமை இருளை அகற்றும் சூரியனே குரு என்பது இதன் பொருள்.

**ஓமச்யுதாய குரவே சிஷ்ய ஸம்ஸார ஸேதவே |**
**பக்தகார்யைகஸிம்ஹாய நமஸ்தே சித்ஸுகாத்மனே ||339||**

339. ஸம்ஸாரக் கடலைத் தாண்டுவதற்கு சிஷ்யர்களுக்கு பாலம் போல விளங்கும் அந்த குருவிற்கு வணக்கம். சி டர்களின் காரியங்களை நன்முறையே பூர்த்தி செய்துவைக்கும் அந்த சித்சுகாத்மனுக்கு (இதயத்தில் பொங்கி எழும் மட்டற்ற மகிழ்ச்சி வடிவினருக்கு) நமஸ்காரம்.

**குருநாம ஸமம் தைவம் ந பிதா ந ச பாந்தவா: |**

குருநாமஸம: ஸ்வாமீ நேத்ருசம் பரமம் பதம் // 340 //

*340.* குருநாமத்திற்கிணையான கடவுளோ, தந்தையோ, உற்றாரோ கிடையாது. குருநாமத்திற்கிணையான தலைவனும் கிடையாது. குருவின் பரமபதத்திற்கிணையான நிலையும் கிடையாது.

ஏகாக்ஷர ப்ரதாதாரம் யோ குரும் நைவ மன்யதே /
ச்வான யோ நிசதம் கத்வா சாண்டாலேஷ்வபி ஜாயதே
// 341 //

*341.* ஓம்காரத்தை அளிக்கும் குருவை எவன் மதித்துப் போற்றவில்லையோ அவன் நாயின் யோனியில் பன்முறை பிறவி எடுத்து சண்டாள யோனியிலும் புகுகின்றான்.

குருத்யாகான் பவேத்ம்ருத்யு மந்த்ரத்யாகாத் தரித்ரதா /
குருமந்த்ர பரித்யாகீ ரௌரவம் நரகம் வ்ரஜேத் // 342 //

*342.* குருவை விடுவதால் ஒருவன் மரணத்திற்குள்ளாகிறான். மந்திரத்தை விடுவதால் வறுமைக்குள்ளாகிறான். குரு மந்திரத்தை விடுவதால் ஒருவன் ரௌரவம் எனும் கடும் நரகத்தை அடைகின்றான்.

சிவக்ரோதாத் குருஸ்த்ராதா குருக்ரோதாத் சிவோ ந ஹி /
தஸ்மாத் ஸர்வ ப்ரயத்னேன குரோராக்ஞாம் ந லங்கயேத்
// 343 //

*343.* சிவனின் கோபத்திலிருந்து குரு உங்களைக் காக்க வல்லவர். ஆனால் குருவின் கோபத்திற்கு நீங்கள் உட்பட நேரிட்டால் சிவன் கூட உங்களைக் காப்பாற்ற முடியாது. எனவே குருவின் கட்டளைகளை ஒருவன் எந்த நிலையிலும் மீறாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

ஸம்ஸார ஸாகர ஸமுத்தரணைக மந்த்ரம்

**ப்ரம்மாதிதேவ முனி பூஜித ஸித்த மந்த்ரம் /**
**தாரித்ர்ய துக்க பவரோக விநாச மந்த்ரம்**
**வந்தேமஹாபய ஹரம் குரு ராஜமந்த்ரம் // 344 //**

*344.* ஸம்ஸார சாகரத்தைக் கடக்க துணைபுரியும் மந்திரமும், பிரம்மா மற்றும் மாமுனிவர்கள் போற்றும் ஸித்த மந்திரமும், வறுமையிலிருந்தும், ஸம்ஸார பயத்திலிருந்தும் உங்களைக் காக்க வல்ல குருராஜ மந்திரத்தை நான் வணங்குகின்றேன்.

**ஸப்த கோடி மஹா மந்த்ராஸ் சித்த விப்ரம்ச காரகா: /**
**ஏக ஏவ மஹா மந்த்ரோ குரு ரித்யக்ஷர த்வயம் // 345 //**

*345.* ஏழுகோடி மஹா மந்திரங்களும் மனதைக் குழப்புகின்றன. 'கு', 'ரு' என்ற இரண்டே எழுத்துக்களைக் கொண்ட 'குரு' வே அனைத்திலும் சிறந்த 'மஹாமந்திரம்.

**ஏவமுக்த்வா மஹாதேவ : பார்வதீ புரனரப்ரவீத் /**
**இதமேவ பரம்தத்வம் ச்ருணு தேவி ஸுகாவஹம் // 346 //**

*346.* இவ்வாறு சொல்லிவிட்டு, மஹாதேவன் பார்வதியிடம், "தேவி! இதுவே பெரும் தத்துவம். இது உனக்கு அனைத்து சுகத்தையும் கொடுக்கும் ", என்றார்.

**குருதத்வமிதம் தேவி ஸர்வமுக்தம் ஸமாஸத: /**
**ரஹஸ்ய மிதமவ்யக்தன்ன வதேத்யஸ்ய கஸ்யசித் // 347 //**

*347.* தேவி! தத்வம் முழுவதும் சுருக்கமாக உனக்குக் கூறப்பட்டது. இதுவரை சொல்லப்படாத ரகசியம் இது. இது எல்லோருக்கும் சொல்லப்படக் கூடாதது.

**நம்ருஷா ஸ்யாதியம் தேவி மதுக்தி: ஸத்யரூபிணி /**
***குருகீதாஸமம் ஸ்தோத்ரம் நாஸ்தி நாஸ்தி மஹீதலே //348//***

*348.* தேவி! இது ஒருக்காலும் பொய்க்காது. ஸத்யரூபிணி! என்னால் சொல்லப்பட்டது அனைத்தும் உண்மை. அகில உலகிலும் குருகீதைக்கிணையான ஸ்தோத்திரம் கிடையாது, கிடையாது, கிடையவே கிடையாது.

***குருகீதாமிமாம் தேவி பவதுக்க விநாசினீம் /***
***குருதீக்ஷா விஹீனஸ்ய புரதோ ந படேத் க்வசித் // 349 //***

*349.* இந்த குருகீதை ஸம்ஸார துக்கத்தைப் போக்கவல்லது. குருதீட்சை பெறாதவன் எவனுக்கும் இது சொல்லப்படக் கூடாது.

***ரஹஸ்ய மத்யந்த ரஹஸ்யமேதன்ன பாபினா லப்யமிதம் மஹேஸ்வரி /***
***அநேக ஜன்மார்ஜித புண்ய பாகாத் குரோஸ்து தத்வம் லபதே மனுஷ்ய : // 350 //***

*350.* இது ஒரு பெரிய ரகசியம். தேவி ! இந்தப் பரம ரகசியம் பாபி ஒருவனுக்குச் சொல்லப்படக் கூடாதது. பல பிறவிகளில் ஒருவன் செய்த புண்ணியத்தின் பலனாகவே ஒருவன் இந்தப் பேருண்மையை அறிய வல்லவனாகிறான்.

***யஸ்ய ப்ரஸர்தா தஹமேவ ஸர்வம்***
***மய்யேவ ஸர்வம் பரிகல்பிதம் ச //***
***இத்தம் விஜானாமி ஸதாத்மரூபம்***
***தஸ்யாஸ்ரிபத்யம் ப்ரணதோஸ்மி நித்யம் // 351 //***

*351.* எவரது கருணையால் 'அனைத்தும் நானே. என்னில் அனைத்தும் உள்ளன' என்று நான் உணர்கின்றேனோ, எவரது கருணையால் ஸதாத்மரூபத்தை நான் உணர்கின்றேனோ அந்தப் பொற்றாமரை அடிகளுக்கு நான் மீண்டும் மீண்டும் நமஸ்காரம் செலுத்துகின்றேன்.

அக்ஞான திமிராந்தஸ்ய விஷயாக்ராந்தசேதஸ: ।
ஞானப்ராபாப்ரதானேன ப்ரஸாதம் குரு மே ப்ரபோ
|| 352 ||

352. எவரது கண்கள் அறியாமை எனும் திரையினால் மறைக்கப்பட்டிருக்கின்றனவோ, புலனின்பங்களால் எவரது மனம் ஆக்கிரமிக்கப்பட்டிருக்கிறதோ, பிரபுவே! ஞானதானத்தால் உமது ஆசிர்வாதங்கள் என் மீது பொழியப்படட்டும்.

குருகீதையின் மூன்றாம் அத்யாயம் முற்றும்

இதி ஸ்ரீ குருகீதாயாம் த்ருதீயோத்த்யாய: ।
இதி ஸ்ரீஸ்காந்தோத்தரகண்டே ஸனத்குமாரஸம்ஹிதாயாம்
உமா மஹேஸ்வர ஸம்வாதே ஸ்ரீ குருகீதா ஸமாப்தா ।

ஸ்காந்த புராணத்தின் உத்தரகாண்டத்தில் ஸனத்குமார ஸம்ஹிதையில் உமாமஹேஸ்வர ஸம்வாதத்தில் குருகீதை முற்றும்.

